# திருப்பேரூர்க் கலம்பகம்

நூலாசிரியர்
**கவியரசு. கு. நடேச கவுண்டர்**

பதிப்பாசிரியர்
**கோ.ந. முத்துக்குமாரசுவாமி**
மேனாள் முதல்வர்,
தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரி, பேரூர்.



சிரவைக் கௌமார சபை வெளியீடு

# திருப்பேரூர்க் கலம்பகம்

நூலாசிரியர்

**கவியரசு. கு. நடேச கவுண்டர்**

பதிப்பாசிரியர்

**கோ.ந. முத்துக்குமாரசுவாமி**

மேனாள் முதல்வர்,

தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரி, பேரூர்.

வெளியீடு

**சிரவைக் கௌமார சபை**

**சிரவணபுரம் கௌமார மடாலயம்**

சின்னவேடம்பட்டி, கோவை - 641 049

சிரவையாதீனக் கஜபூசை வெள்ளிவிழா
நினைவு வெளியீடு

வெளியீட்டு எண் : 308

நூல் பெயர் : திருப்பேரூர்க் கலம்பகம்

நூலாசிரியர் : கவியரசு கு. நடேச கவுண்டர்

பதிப்பாசிரியர் : முனைவர். கோ.ந.முத்துக்குமாரசாமி

வெளியீட்டு நாள் : 22.03.2012

படிகள் : 300

விலை : ரூ 30.00

அச்சிட்டோர் : சௌமி அச்சகம்
1E, துடியலூர் சாலை,
சரவணம்பட்டி,
கோவை - 641 035.
அலைபேசி : 98422 52779

நூல் கிடைக்குமிடம் : தலைவர்
கௌமார மடாலயம்,
சின்னவேடம்பட்டி,
கோவை - 641 049.
தொலைபேசி : 0422-2666370



## நூலாசிரியர் பற்றி...

இந்நூலாசிரியர் கோவை, கவியரசு கு. நடேச கவுண்டர் அவர்கள் திரு. குமாரசாமிக் கவுண்டர், திருமதி அங்கம்மாள் ஆகிய தம்பதியருக்கு மூத்தமகவாக 1901ஆம் ஆண்டு பங்குனி உத்திர நன்னாளில் பிறந்தார். பங்குனி உத்திரத்தில் பிறந்தமையால் நடேசன் எனப் பெயரிட்டுப் பெற்றோர் மகிழ்ந்தனர்.

இளவயதிலேயே தந்தையை இழந்த இவர் தம் தாய்மாமனின் தையல் நிலையத்தில் காஜாத் தொளை எடுக்கும் சிறுவனாக வாழ்க்கையைத் தொடங்கினார். முற்பிறவிப் புண்ணியம் இருந்தமையால் வேட்டைகாரன்புதூரில் சமாதி கொண்டிருக்கும் தவத்திரு அழுக்குச் சாமிகளின் திருக்கண்ணோக்கம் இவர்பால் விழுந்தது. அழுக்குச்சாமிகள் இவருக்குத் தமிழின்பம், சிவபத்தி, திருமுறைப்பயன் ஆகியவற்றை ஊட்டினார்.

பள்ளபாளையம் வையாபுரிப்பிள்ளை என்னும் சான்றோர், சிறுவன் நடேசனுக்கு இயல்பாகவே இருந்த தமிழறிவினை இலக்கணக்கல்வி அளித்து மேலும் வளர்த்தார். பேரூர் சாந்தலிங்கர் திருமடத்தில் தமிழறிஞர்கள் சமயச் சான்றோர்கள் குழுமும் சத்வித்யாசன்மார்க்க சங்கத்தை அறிமுகம் செய்து வைத்தார். கோவை நீதிமன்றத்தில் சிரஸ்தாராகப் பணியாற்றிய பிள்ளை மூலம் வழக்கறிஞர் சிலரிடம் எழுத்தராகப் பணிபுரியும் வாய்ப்பு நடேசனாருக்குக் கிட்டியது. நடேசனார் மதுரைத்தமிழ்ச்சங்கம் நடத்தும் பாலபண்டித் தேர்விலும் பின்னர், சென்னைப் பல்கலைக்கழகப் பண்டிதர் தேர்விலும் முதல்வகுப்பில் தேறி நகராண்மை உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியரானார்.

சத்வித்யா சன்மார்க்க சங்கத்தின் வழியே சிரவணபுரம் கௌமார மடாலயத்தின் குருமூர்த்தியும் கொங்குக் கச்சியப்பருமாகிய தவத்திரு கந்தசாமி சுவாமிகளின் அன்புக்கு உரியரானார். சுவாமிகள் இவருக்கு வித்யாகுருவாக விளங்கினார். நடேசனார் சந்தத்தமிழ்க் கவியாக விளக்கம் பெற்றார். பின் நாளில், கோவைத் தமிழ்ச்சங்கத்தாரால் 'கவியரசு' எனும் பட்டம் அளிக்கப் பெற்றார்.

நகராண்மைப் பள்ளியின் ஆசிரியப் பணியிலிருந்து ஓய்வு பெற்ற பின் தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரியில் ஆசிரியராகவும் முதல்வராகவும் சிலகாலம் பணியாற்றினார். மதுரையாதீனம் தவத்திரு சோமசுந்தரப் பரமாச்சாரிய சுவாமிகள், தொண்டைமண்டலவாதீனம் சீலத்திரு ஞானப்பிரகாச சுவாமிகள் ஆகிய பெரியோருடன் நெருங்கிய நட்புக்குரியராக விளங்கினார்.

1972ஆம் ஆண்டு வைகாசி விசாகத்தன்று அம்பலவாணர் திருவடி அடையப்பெற்றார்.



# ஆசியுரை

**தவத்திரு குமரகுருபர சுவாமிகள்**
**சிரவையாதீன கர்த்தர்**

கவியரசு திருமிகு. கு. நடேச கவுண்டர் ஐயா அவர்கள் தன் சொந்த முயற்சியிலேயே தமிழ் கற்று நல்ல போதாசிரியராக, கவிஞராக, ஆய்வாளராக உயர்ந்து தமிழ்ப்பணி புரிந்த தகைசான்ற சான்றோர் ஆவார். அவர் இறையன்பில் இணையறறவராகத் தவறாத சிவபூசைச் செல்வராக விளங்கினார். சற்றும் வாய்ப்பற்ற நிலையில் மிகக் கஷ்டப்பட்டு வடமொழியைப் பயின்று அம்மொழியிலும் புலமை பெற்றார். தம்மைப் பொறுத்தவரையில் சைவ சித்தாந்தக் கொள்கையில் அசைக்கமுடியாமல் ஆழங்கால் பட்டிருந்தும், சிவபெருமானின் அடியவர்களாக விளங்கிய அத்துவிதம் முதலிய பிறசமய ஆசிரியர்களின் வடமொழி நூல்களையும் மிகுந்த ஈடுபாட்டோடு மூலத்திற்கு இணையாகத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். கவியரசு அவர்களின் நியாயக் களஞ்சியமும், அப்பர் தேவாரத் திறனாய்வும் தமிழ்ச்சைவ இலக்கிய ஆய்விற்கு மிகச் சிறந்த கருவி நூல்களாகும்.

திரு. நடேசகவுண்டர் ஐயா அவர்கள் நம் ஆதீனத்தின் இரண்டாவது குருமகா சந்நிதானங்களிடம் தமிழ்நூல்கள் பலவற்றைப் பாடங்கேட்டார். ஆசிரியரின் படைப்புக்கு மாணவர் சிறப்புப்பாயிரம் அளித்தல் என்னும் மரபு பற்றிச் சுவாமிகளின் பல நூல்களுக்குக் கவியரசு சாற்றுக்கவி அளித்துள்ளார். அவ்வாறே திரு. கவுண்டர் ஐயா அவர்களின் படைப்புகளுக்கும் சுவாமிகள் சாற்றுக்கவிகள் அருளியுள்ளார். தம்பால் தமிழ்கற்க வந்த சிலரைச் சுவாமிகள் கவியரசு அவர்களிடம் ஆற்றுப்படுத்தினார் என்பதிலிருந்தே அவரைச் சுவாமிகள் எந்த அளவு மதித்திருந்தார் என்பதை அறியலாம்.

கவியரசு அவர்களின் படைப்புகளைத் தமிழ்ச் சிற்றிலக்கிய வகைகள், மொழி பெயர்ப்புகள், இசைப் பாடல்கள், ஆய்வு நூல்கள் உரைகள் என வகைப்படுத்தலாம். சிற்றிலக்கியங்களுள் எட்டுப்

பிள்ளைத் தமிழ்கள், ஒரு கலம்பகம், இரு தூதுகள், ஒரு தாலாட்டு, ஒரு திருப்பள்ளியெழுச்சி, சில பதிகங்கள் முதலியன அடங்கும்.

ஒரு கவிஞன் தன் படைப்பாற்றலை நன்கு வெளிப்படுத்திப் பல பொருளணி சொல்லணிகளுடன் பல செய்திகளையும் வெளியிடக் கலம்பகம் ஒரு சிறந்த கருவியாக இருப்பதால் கற்றோர் யாவரும் இதனை விரும்பிப் போற்றுகின்றனர். கி.பி. 9ஆம் நூற்றாண்டில் தோன்றிய நந்திக் கலம்பகம் முதல் இன்றுவரை கிட்டத்தட்ட நூறு கலம்பகங்கள் தோன்றியுள்ளன. வண்ணச்சரபம் சுவாமிகள் ஒருவரே ஐந்து கலம்பகங்களை இயற்றியுள்ளார். (ஆறாவது புதுவைக் கலம்பகம் அழிந்து விட்டது). தவத்திரு சிரவைக் கந்தசாமி சுவாமிகள் அவர்கள் திருப்பேரூருக்கு ஒரு கலம்பகம் இயற்றியுள்ளார். அது 1978இல் உரையுடன் சிரவைஆதீனப் பதிப்பாக வெளிவந்து இரண்டாம் பதிப்பை எதிர்நோக்கி நிற்கிறது.

திருமிகு. கு. நடேசக்கவுண்டர் அவர்கள் திருப்பேரூரைப் போற்றும் கலம்பகம் ஒன்றை இயற்றி 1952இல் வெளியிட்டுள்ளார். இதன் பதிப்புரையில் கணபதி கி. குமாரசிவம் அவர்கள், ''சிறந்த சொற்பொருள் விசேடங்கள் அமைந்ததும் அகப்பொருள் துறைகள் விரவியதும், சிவமணம் பரப்புவதுமான இச்சிறிய (?) பிரபந்தத்தைப் தமிழுலகத்திற்குத் தந்தது சாலச் சிறந்த சேவையே'' என்பது சற்றும் மிகைப்படுத்தப்படாத உண்மை.

கவியரசு அவர்களின் எட்டுப் பிள்ளைத் தமிழ் நூல்கள் இப்போது பதிப்பாகின்றன. இந்நூல்கள் திருமிகு. நடேசக்கவுண்டர் ஐயா அவர்களின் அருந்தவப் புதல்வி திருமதி. ந. அங்கயற்கண்ணி அவர்களின் புண்ணியப் பொருளுதவியுடன் கவியரசு அவர்களின் மைந்தரும், பேரூர்த் தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரியின் மேனாள் முதல்வருமாகிய பாராட்டுக்குரிய பேராசிரியர் முனைவர் கோ.ந. முத்துக் குமாரசாமி அவர்களின் பதிப்பாக வெளியிடப்படுகின்றன. போற்றுதலுக்குரிய சிரவையாதீனம் தவத்திரு கஜபூசைச் சுந்தர சுவாமிகள் அவர்களின் செயற்கரிய செயலாகிய கஜபூசையின் வெள்ளிவிழா நினைவு மலர்களாக இவை மலர்வது மிகப் பொருத்தமானது. தமிழ்மொழியின் ஆடி அசலங்களை நன்கு அறிந்துகொள்ள இத்தகைய நூல்களை அனைவரும் படித்துப் பார்க்க வேண்டும் என விழைகிறோம்.

# அணிந்துரை



முனைவர். ந. இரா. சென்னியப்பனார்,
தலைவர், மணிவாசகர் அருட்பணி மன்றம்,
பேரூர், கோவை - **10.**

புவியரசு பங்கயத்தான் புரந்தான் போற்றுகின்ற
புவிபரகம் உமைபாகன் புகழ்பாடும் திருமுறையின்
செவிபரசும் இசையுணர்ந்தோன் செழுந்தமிழின் திறமுணர்ந்தோன்
கவியரசு நடேசனார் கழலடியைக் கருத்திருத்துவாம் 1

மங்கையர்க் கரசிமேல் மாண்பான பிள்ளைத்தமிழ்
கங்கையற் குபதேசி கனிமுருகன் பிள்ளைத்தமிழ்
தங்கையன் எட்டிக்குடி தகவான பிள்ளைத்தமிழ்
அங்கையன் பழனியாண்டி அணிமயில் விடுதூது 2

திருநிலை நாயகி திறம்பேசும் பிள்ளைத்தமிழ்
பெருநிலை கந்தசாமி பேர்போற்றும் பிள்ளைத்தமிழ்
ஒருநிலை திருமுடியார் உயர்நெஞ்சு விடுதூது
தருநிலை பேரூரின் தரமான கலம்பகம் 3

பகுதியாய்த் துணைமாலை பாங்கான பிள்ளைத்தமிழ்
தகுதியாய்ப் படைத்தளித்த தண்டமிழின் கவியரசு
தொகுதியாய் வெளிக்கொணரும் தோன்றல் குமரகுருபரர்
மிகுதியாய் இவர்பாதம் மேல்வைத்து வணங்குதுமே 4

சிரவைநகர்க் கந்தசாமி சீரடியைத் துதித்திடுவோன்
அரவையணி பெம்மானின் அடிவணங்கும் பெருந்தவத்தோன்
இரவைநிகர் மலமோட்டும் இனியதமிழ்க் கவியரசு
கரவைமனம் இல்லாத கற்றறிந்த பெரும்புலவன் 5

கோவைநகர்க் கவியரசு கொண்டகொள்கை மாறாதான்
ஆவைநிகர் அழுக்குசாமி அருந்தவத்துச் சாதுசாமி
காவைநிகர் இராமானந் தர்கழலடி கருத்துறுவோன்
ஏவைநிகர் விழியுடைய எம்மன்னை அருள்பெற்றோன் 6



பொன்னிறம் தரும்சைவ வெண்ணீறு மங்காது
பூசுககண் மணிகள் அணிக
புலைகொலை மயக்கம் நீர்ஒழிக மன்னுயிரையுன்
போலன்பு கொடுபோற்றுக
மன்னுசிவ பத்தரைப் பாகவதர் தம்மையரன்
மாலென மதிக்கநீர்தூய்
மலரிட்டு வழிபாடு செய்தபின்னே யுணவு
வாயிகுக, தெய்வநாமம்
உன்னிடுக, எப்போதும் உருவவழி பாடுசெயல்
ஒழியற்க தீயர்கும்பல்
உறலொழிக! இறைவனருள் உனைதேடி வரும்...
(தவத்திரு கந்தசாமி சுவாமிகள் பிள்ளைத்தமிழ்)

என்று குருநாதர் கந்தசாமி சுவாமிகள் கூறியதாகக்கவியரசு பாடியுள்ளார்.

1. சைவ வெண்ணீறு மங்காமல் பூசுதல், 2. உருத்திராக்கமணி அணிதல், 3. புலை, கொலை, மது முதலியவற்றை நீக்குதல், 4. மன்னுயிரைத் தன்னுயிர் போல் போற்றல், 5. சிவனடியார்களைச் சிவனாகவே மதித்தும் திருமாலடியார்களைத் திருமாலெனவே மதித்தும் வரவேற்று மலரிட்டு வழிபாடு செய்தபின் உணவு உண்ணுதல். 6. தெய் நாமமாகிய மந்திரத்தை மறவாது கணித்தல். 7. சிவபூசை செய்தல், 8. சிற்றினம் சேராதிருத்தல் ஆகியவற்றை மேற்கொண்டால் திருவருள் தேடி வரும் என்று சுவாமிகள் உபதேசித்ததாகக் கூறியுள்ளார். கவியரசு வாழ்க்கையில் இவற்றை முற்றிலுமாகப் பின்பற்றி வாழ்ந்தவராவர்.

கவியரசு தாம் பாடிய நூல்களில் தவத்திரு சாதுசாமி, தவத்திரு கந்தசாமி சுவாமி ஆகியோரை உரியவிடங்களில் புகழ்ந்து பாராட்டியுள்ளார். பழனியாண்டவர் மயில் விடுதூதில் விநாயகர் காப்பை அடுத்து "தஞ்சமென அஞ்சலெனும் சாதுகுருநாதன்" என்று சற்குருநாதர் வணக்கத்தில் போற்றிப் புகழ்ந்துள்ளார். "எமது தாழ்குடியைக் கொத்தடிமை கொண்ட குருசாது" என் நூலினுள்ளும் குறிப்பிட்டுள்ளார். தவத்திரு சாதுசாமிகள் மீது நவமணி மாலை என்று ஒரு தனிப்பனுவலையும் பாடியுள்ளார். மயில்விடுதூதில் வித்யா குரு துதியில் கந்தச்சுவாமி

கருணாகரச்சாமி, கந்தச் சுவாமி தமப்பச்சாமி என்று கருத்துரைத்தார். தவத்திரு கந்தசாமி சுவாமி பிள்ளைத்தமிழில், அம்மைக் கவிஞன் எங்கள் குரு அருளார் கவி சற்குணமேரு ஆன கந்தசாமி என்றும் "எழுபிறப்பும் வழியடியேம், இயற்றும் தவத்தால் இங்கெய்தி, இணையிலாடல் புரிந்தருளும் எந்தாய்" என்றும் "குருவே கந்தசாமிக்குணக் குன்றே" என்றும் "சிரவைக் கந்த தேசிகனே" என்றும் "அனுபூதியருள் குருகந்தசாமி" என்றும் பலவாறாகப் பாடியுள்ளார். "செய சுந்தரச்சாமி நினது வழிவாழவே" என்று வாழ்த்தியும் உள்ளார்.

கவியரசு அவர்கள் பாராட்டிப் புகழ்ந்த மற்றொரு துறவியார் தவத்திரு திருமுடி சுவாமிகள் ஆவார். அவர்மீது நெஞ்சு விடுதூது என்ற எளிய பனுவலைப் பாடியுள்ளார். கவியரசு அவர்கள் பாடிய முதல் இலக்கியம் இதுவே.

"பிறவிப் பெருங்கடலை நீந்தலெனும் பெட்பே
உறவிக் குவலயத்தே உண்மைத் - துறவித்தோல்
தோணியாம் சற்குரவன் தோன்றுவது எக்காலம் அவற்
காணிய எந்நாள்"

என்று ஏங்கிய கவியரசுக்கு

"அரிய புலன் ஐந்தும் அவித்தார் குணமாம்
பெரிய மலைமேல் நின்று பெற்றியார் - பெரிய
சடைமுடி சூடிய தவராசர் ஆவார்"

ஆகிய ஞானியைக் கண்டார்.

"திருவடி எம்சென்னிமிசைச் சூட்டியருளும்
திருமுடி என்றேத்திச் சிரமேல் - கரமலர்கள் சூடினார்"

"மாற்ற இயலா மனத்திருளை மாற்றியொளி
ஏற்றும் பதத்தாமரை இணையும் - நோற்ற
தவப்பயனால் கண்டேன்"

என்று திருமுடி சுவாமிகளின் பெருமையினைத் தம் முடிமேல் வைத்துப் பாராட்டியுள்ளார்.

1. தவத்திரு திருமுடி சுவாமிகள், 2. தவத்திரு கந்தசாமி

சுவாமிகள், 3. தவத்திரு சாது சுவாமிகள் ஆகிய முப்பெருந்துறவியர்களை மட்டும் பாடியவர் கவியரசு ஆவார்.

"மானிடரைப் பாடாத வண்ணம் பணியடியனேன் இடரைப்
பாட்டை யொழித்து ஏல்"

என்று பேரூர்க் கலம்பகத்தில் பாடியுள்ளார்.

"நாக்கொண்டு மானிடம் பாடேன்" என்றும் "என் நாவில் இன் கவியான் ஒருவர்க்கும் கொடுக்கிலேன்" என்றும் "மானிடரைப் பாடாமல் மாதவனை ஏத்துமின்" என்றும் ஆழ்வார்கள் கூறியதைப் போல் மானிடம் பாடாத மாக்கவிஞர் கவியரசு.

"வம்பறா வரிவண்டு மணம் நாறமலரும்
மதுமலர் நல் கொன்றையான் அடியலால் பேணா
எம்பிரான் சம்பந்தன்" போலவும்

"பொய்ம்மை யாளரைப் பாடாதே எந்தை புகலூர் பாடுமின் புலவீர்காள்" என்ற நம்பியாரூரைப் போலவும்

"தோகைமேல் உலவும் கந்தன், சுடர்க் கரத்திருக்கும் வெற்றி
வாகையே தமக்கு வேலை வணங்குவாதெமக்கு வேலை"

என்ற சைவ எல்லப்ப நாவலர் போலவும் வாழ்ந்த பெருங்கவிஞர் கவியரசு.

முன்னம் உனக்கடிமை முன்னினேன் மோழையேன்
பின்னும் உனையன்றிப் பின்செல்லேன் - அன்னை
அனையபிற வாநெறிவாழ் அப்பனே ஒப்பேன்
எனையபிற வாநெறியுமே (65)

பேரூர் வரலாற்றுத் தொன்மையும் இலக்கியச் சிறப்பும் உடையது. பேரூரைச் சுற்றியுள்ள பகுதிகளில் தொல்பழங்காலச் சின்னங்கள் பல கிடைத்துள்ளன. ஆற்றில் பழைய உரோமனியக் காசுகள் மிகுதியாகக்கிடைத்துள்ளன.

"தீம்புனல் ஆயம் ஆடும்
காஞ்சியம் பெருந்துறை"

என்று பரணர் பதிற்றுப்பத்தில் பேரூரில் ஓடும் காஞ்சியாற்றைப் பாடியுள்ளார். திருநாவுக்கரசரும், நம்பியாரூரரும் தேவாரத்தில்

வைப்புத்தலமாகப் பாடியுள்ளனர். பாண்டியர் செப்பேடு காஞ்சிவாய்ப் பேரூர் என்று குறிப்பிடுகின்றது. பேரூர் நாட்டுக்கோவன் புத்தூர் என்று கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன.

"பாமலி புலவர் போற்றும் பட்டி நாயகனார்" என்று பேரூர்ப் புராணத்தில் கச்சியப்ப முனிவர் புகழ்ந்து பாடியுள்ளார். புலவர் பெருமக்கள் பலர் பாடிய சிற்றிலக்கியங்கள் பல பேரூரைப் பற்றியமைந்தவையாகும். பிள்ளைத்தமிழ், கோவை, கலம்பகம் ஆகியவை பேரூருக்கு இரண்டு இரண்டாக உள்ளனன. கவியரசு கு. நடேசகவுண்டர், தவத்திரு கந்தசாமி சுவாமிகள் ஆகியவர் பாடிய இரண்டு கலம்பகங்கள் பேரூருக்கு உள்ளன. இருவரும் பிள்ளைத்தமிழ் முதலிய சிற்றிலக்கியங்களை மிகுதியாகப் பாடியுள்ளனர். கலம்பகம் பேரூர்க்கு மட்டுந்தான் பாடியுள்ளனர்.

"ஒருபோகும், வெண்பாவும், கலித்துறையும், முதல்கவி உறுப்பாக முற்கூறிப்புயவகுப்பு, மதங்கம், அம்மானை, காலம், சம்பிரதம் கார், தவம், குறம், மறம், பாண், களி, சிந்து, இரங்கல், கைக்கிளை, தூது, வண்டு, தழை, ஊசல் என்னும் இப்பதினெட்டு உறுப்புகளும் இயையமடக்கு, மருட்பா ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, ஆசிரியவிருத்தம், கலிவிருத்தம் கலித்தாழிசை, வஞ்சித்துறை, வஞ்சிவிருத்தம், வெண்டுறை இவற்றால் இடையே வெண்பா, கலித்துறை விரவி அந்தாதி தொடையால் முற்றுறப்...... பாடுவது" கலம்பகம் என்று அபிதான சிந்தாமணி குறிப்பிடுகின்றது.

கலம்பகத்தின் முதல்பாடல் கொச்சக ஒருபோகு என்ற அமைப்பில் அமைய வேண்டும் என்பது மரபு. முதல் கலம்பகமாகிய நந்திக்கலம்பகம், நம்பியாண்டார் நம்பிகள் பாடி ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம் இரட்டைப் புலவர்கள் பாடிய திருவாமாத்தூர்க் கலம்பகம் ஆகியவை அவ்வாறு கொச்சக ஒருபோகு என்ற யாப்பை முதலில் கொண்டவையாகும். பின் வந்த குமரகுருபரர் முதலியோர் அதனினும் கடினமான மயங்கிசைக் கொச்சக் கலிப்பாவை முதல் பாடலாக அமைத்தனர். கவியரசு அவர்களும் பேரூர்க் கலம்பகத்தை மயங்கிசைக் கொச்சகக் கலிப்பாவிலேயே நூலைத் தொடங்கியுள்ளார்.

"மாட்டூர் அறவா! மறவாதுன்னைப் பாடப் பணியாயே" என்றார் சுந்தரர்.

"பாடும் பணியே பணியாய் அருள்வாய்" என்றார் அருணகிரிநாதர்.

கவியரசு பேரூர்க் கலம்பகத்தில்

"ஓயாத ஆனந்தம் உண்டென்றும் துன்பில்லை
சாயாத அன்புண்டு தாழ்வில்லை - மாயாத
வீடுண்டு அளறில்லை மீகொங்கிற் பேரூரைப்
பாடும் பணிசேர் பவர்க்கு"

என்று பாடியுள்ளார்.

"மனனே உனக்கொன்று கேண்மதி வாழ்வெனும் மையல்விட்டு" என்பதில் சிவஞானசித்தியார் கூறும் வாழ்வெனும் மையல்விட்டு என்ற தொடர் அழகாக ஆளப் பெற்றுள்ளது. நால்வர் பெருமக்களையும் அவர்தம் வாக்குக்களையும் எல்லா நூல்களிலும் கவியரசு அவர்கள் மனந்திறந்து பாடியதைக் காணலாம்.

"அரும்பெறல் ஞானம் குழைத்தம்மை பாலுடனார்ந்து தமிழ்ப்
பெரும்பெயல் பெய்முகில் சம்பந்தன் மெய்ப்புகழ்"

என்று ஆளுடைய பிள்ளையார் வணக்கத்தில் பாடியுள்ளார். "தருணமங்கலை..... கவுணியர் சிறுமதலையம்புயல் பருகியே பொருணயம் பெறு கவிதையென்றொரு புனிதமாரி பொழிந்ததே" என்ற கவிராச பண்டிதரின் சௌந்திரிய லகரியின் தமிழ்ப் பாடலை அடியொட்டி அமைந்துள்ளது.

மயங்கிசைக் கொச்சகக் கலிப்பாச்சுரிதகத்தில்

"முக்கனிச் சுவையினும்மிக்கசீர் மூவர்
பாடல் கேட்ட தோடுடைச் செவிகட்கு
அறிவிலேன் வறுஞ்சொலும் கோடல்
முறைமையாகும் முழுமுதலோய்க்கே"

என்று மூவர் தேவாரப் பாடல்களை பாராட்டியுள்ளார்.

சுந்தரமூர்த்தி நாயனார் அவிநாசியில் முதலையுண்ட பாலனை

மீட்டது, திருமுருகன் பூண்டியில் வேடுபறியில் பொருளை இழந்தது ஆகியவற்றை

"முதலை யுண்ட மதலையை அழைத்த
பொய்யாப் புலவன் பொருளாறலைத்துக்
கவர்சிவ வேடக் கள்வர் இருந்த
மங்கலில் தொல்சீர்க் கொங்கு நாட்டில்" (11)

என்று பாடியுள்ளார்.

வேண்டத் தக்கன யாவையும் அறிந்தே
வேண்டும் அன்பர்கட்கு அருளும் எம்மான் என்று
ஆண்டகைத் திருவாதவூர் அடிகள்
அருளிச் செய்ததை அறிந்தும் (15)

என்று திருவாசகத்தைப் பாராட்டியுள்ளார்.

"காட்டகத்து வேடன் கடலில் வலைவாணன்
நாட்டிற் பரிப்பாகன்"

என்ற திருவாசகப்பகுதியை

"காட்டிலே வேட்டுவன்பைங் கடலில் வலைவாணன்
நாட்டில் பள்ளன்பட்டிநாதன்" (25)

என்று பேரூர்த் தலத்திற்கேற்ப மாற்றியமைத்த மாண்பு மனங்கொளற்குரியது.

"மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே" என்று திருவாசகத்திலும் "வாக்கு மனாதீத கோசரமாய் நின்ற அதுவே சத்தாய் உள்ள சிவம்" என்று சிவஞானபோதத்திலும் வருவனவற்றை

"பேச்சுமனங் கடந்த பட்டிப்பெருமானே" (29)

என்று எளிமையாக்கியுள்ளார்.

புயவகுப்பு கலம்பகத்தில் சிறந்த பகுதியாகும்.

"கவுணியர்கள் குலமதலை அரசுமுதலியபெரியர்
கனிவுமிகு தொடைவிழை வினாயே புனைந்தன"

என்று திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் முதலிய பெரியவர்கள் பாடல்களை இறைவன் புயங்கள் புனைந்தன என்று பாடியுள்ளார்.

"கடிகமழும் அமரரிடும் அலரினொடு எனையனையவர்
கருதியிடும் எளியதழை நீரால் நனைந்தன" (32)

என்று அவையடக்கமாத் தம்மையுக் கூறிக் கொள்கிறார்.

"நின்போலமரர்கள்.... என்போலிகள் பறித்திட்ட இலையும் முகையும்
எல்லாம் அம்போதெனக்கொள்ளும் ஐயாறனடித்தலமே"

என்று அரசுகளின் அடிக்கருத்தும் அடிப்படையாக அமைந்துள்ளது.

"வம்பு பேசிய நம்பியாரூரன் மணத்தில் ஆவணங் காட்டி வந்தாண்டீர்"

என்று நம்பியாரூரர் வரலாற்றைச் சுருங்கச் சொல்லி விளங்க வைத்துள்ளார்.

"நின்மலனார், பாடும்படிக் கவுணிக்கு அமுதீந்த பரஞ்சுடர்"(75)

என்று திருஞானசம்பந்தரைச் சுட்டியுள்ளார்.

"நுவலருஞ்சீர்ச் சொல்வேந்தன் அல்லேன், ஞானம்
நுகர்ந்தமறைப் பிள்ளையல்லேன், நம்பியல்லேன்,
உவமமிலாத் திருவாத வூர்த்தே வல்லேன்
ஓங்குதிரு வருள் வடலூர் வள்ளல் அல்லேன்
அவர்மொழிகூட் டுண்ட திருச்செவிகட் கந்தோ
அடிநாயேன் புன்மொழிகளாமோ விண்ணோர்
நவவமுதுள் பவர்க்கேழை புன்கூழ் வார்த்தல்
நயப்பாமோ திருப்பேரூர் நயந்த தேவே" (82)

1. திருநாவுக்கரசர், 2. திருஞானசம்பந்தர், 3. நம்பியாரூரர், 4. மாணிக்கவாசகர், 5. வடலூர் வள்ளல் பெருமான் ஆகியோரைக் கூறி அவர்கள் போன்றவன் நான் அல்லேன். அவர்கள் பாடல்களைக் கேட்ட செவிகள் என்பாடல்களைக் கேட்குமா? அவர்கள் பாடல்களின் சுவை தேவர்கள் உண்ட அமுது போன்றது என் பாடலின் இயல்பு, ஏழை வார்க்கும் கூழ்போன்றது என்று அவையடக்கமாகப் பாடிய முறை

"பணியுமாம் என்றும் பெருமை" என்ற திருக்குறளை நினைவு கூறுகின்றது.

சுவாமிநாதன் பிள்ளைத்தமிழிலும், மெய்ப்பொருள் கூறும் மாமறைப்பனுவல், ஆகம வகைகள், சங்கம் ஏறியவர் செய் செந்தமிழ்த்தொகை அருணகிரிநாதரின் திருப்புகழ்த்தேம்பாகு, திருப்போரூர் சிதம்பர சுவாமிகள், குமரகுருபரர், பாம்பன் சுவாமிகள் ஆகியோரின் துதிப்பாடல்கள் ஆகியவற்றை அணிந்து கொண்ட பெருமான் "எளியேன் சொல் ஒளிரும் தோளணி யருட்குருமலைக்குகன்" என்று பாடியுள்ளார்.

பித்தன் என்று இகழ மாட்டேன், திருவடி சூட்டினால் வெறுக்கமாட்டேன், பொன்தருக என்று தொடர்ந்து கேட்கமாட்டேன், மாதர்பால் தூதாக அனுப்ப மாட்டேன் என்று கூறி அடியேன் அடிமை செய்கின்றேன், ஒழித்திடல் அழகோ (84) என்று கேட்கும் முறையிலமைந்த பாடல் கற்பனைக் களஞ்சியம் சிவப்பிரகாசர் பாடலை நினைவூட்டுகின்றது.

மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை பாடிய திருவட போக்கிக் கலம்பகம் தனிச்சிறப்புடையது.

தழுவுமையால் முன்னும் தமிழிறையாற் பின்னும்
தொழுமிறையால் மேலும் சுவடு - கெழுமுவகீழ்
இன்றால் எனுங்குறைபோம் என்மனஞ்சேர் வாட்போக்கி
அன்றால் அமர்ந்தாய் அடி (7)

காஞ்சியில் உமாதேவி தழுவியதாய் முன்புறத்தில் (மார்பில்) தழும்பும், தமிழ் மன்னன் பாண்டியன் பிரம்படியால் பின் (முதுகில்) தழும்பும், ஆரிய அரசன் வாள் கொண்டு வெட்டியதால் முடியில் தழும்பும் உள்ளன. வாட்போக்கி இறைவனே கீழே தழும்பு இல்லை என்ற குறை என்மனத்தின் மேல் திருவடி வைத்தால் தீரும் என்று பாடியுள்ளார். பேரூர்த் தலத்திற்கேற்ப அக்கற்பனையையே மாற்றி

பற்றாதார் புரமெரித்த பவள வண்ணா
பட்டீசா! மரகதப்பெண் பாகா! சென்னிக்
கற்றாவின் கோடுழுத் தழும்பும், மார்பிற்
காரிகையாள் முலைத் தழும்பும், மேனியெல்லாம்

முற்றாதான் எறிந்த சிலைத் தழும்பும், பாண்டி
முடிமன்னன் அடித்தழும்பும் முதுகின் மீதும்
பெற்றாலும் திருவடிக்கோர் தழும்பின் றென்னும்
பெருங்குறை என்னுள்ளத்து இருத்தப் போகுங்காணே(95)

என்று பாடியுள்ளார்.

ஆசிரியப்பா, ஆசிரிய விருத்தங்கள், வெண்பா, வெண்டுறை கலிப்பா, தரவுகொச்சகக் கலிப்பா, கொச்சகக் கலிப்பா, கட்டளைக் கலிப்பா, கட்டளைக் கலித்துறை, கலிவிருத்தம், கலித்தாழிசை, வஞ்சித்துறை வஞ்சி விருத்தங்கள் முதலிய யாப்பில் பாடல்களைக் கவியரசு அவர்கள் அமைந்துள்ளார். அவற்றில் சந்தம், மடக்கு, யமகம், திரிபு ஆகியன அமையப் பாடியுள்ளார்.

மயங்கிசைக் கொச்சகக்கலிப்பாவில் அராகம், தாழிசை, அம்போதரங்கம் ஆகியவை முடுகியல் ஓசையில் அமைந்துள்ளன. இரங்கல் (4) சிந்து (14) ஊசல் (20) இரங்கல்(40) மறம் (42) களி (48) கொற்றியார் (56) (57) வலைச்சியார் (61) (62) குறம் (64) பிச்சியார் (67) மேகவிடுதூது (64) மதங்கியார் (77) மடல்விலக்கு (81) இடைச்சியார் (86) முதலிய கலம்பகத்துறைகள் கற்பனை நயத்துடன் பாடப்பெற்றுள்ளன. கலம்பக உறுப்புக்களுள் "மறம்" என்ற உறுப்பு கலம்பகத்தின் சிறப்பிற்குக் காரணமாகும் அம்புலிப் பருவத்தால் பிள்ளைத்தமிழின் உயர்வை அறியலாம். பெதும்பைப் பருவ வருணனையால் உலாவின் உயர்வை உணரலாம். இடமணித்து என்ற துறையால் கோவையின் சிறப்பை அறியலாம். அதுபோல மறம் என்ற துறையால் கலம்பகத்தின் சிறப்புப் புலப்படும்.

உயர்ந்த குடியைச் சேர்ந்தவருடைய தூதுவன் வேடர்சேரியில் உள்ள பெண்ணைத் திருமணம் செய்யக் கேட்டு வந்துள்ளான். வேடரினத்தவர் பெண்தர மறுத்துத் தங்கள் குடியின் சிறப்பைக் கூறுவர். புறப்பொருளில் மகள் மறுத்து மொழிதல் என்னும் துறையாகும்.

பெரியவாய் மதங்கள் பேசி வந்த தூத! கேளா! என்று தூது வனைப்பார்த்துக் கூறுவதாகப் பாடல் அமைந்துள்ளது. புலி, யானை, சிங்கம் ஆகிய விலங்குகளைக் கொன்று தோலையணிந்து

புகழ் மேவி வாழ்வோம் - பேரூரில் வாழ்வோம் (பேரைமேவி உறையும் வேடர்) அத்தகைய வேடர் உறவினைராகிய நாங்கள் கொள்கையில் உறுதியில்லாத அரசருடன் உறவு கொண்டு பெண்தர இசைவோமா? தாரகாசூரன் (கரியினோடு, சிங்கமுகாசூரன் (சிங்கமுகம்) மாமரமாகநின்ற சூரபன்மா (ககனமேவுகொக்கினை) ஆகியோரை வென்ற முருகப் பெருமானுக்கே அரிய வீரத்திற்காக வளர்ப்புப் பெண்ணாகிய வள்ளியை ஈந்தோம். உங்கள் அரசனுக்கு அரிதில் பெற்ற பெண்ணைத் தருவோமா? (42) என்ற கருத்தமைய்ப் பாடலமைந்துள்ளது.

தமரும் தந்தையும் தமையனும்
　　தமிழும் சைவமும் தந்த தயாளனும்
எமனையும் பிரமாவையும் அஞ்சிடாது
　　இன்னருள் தரும் எங்குல தெய்வம் (52)

உறவினராகவும் தந்தையாகவும் தமையனாகவும், தமிழும் சைவமும் தந்த கருணையுடையனாகவும் உள்ளபட்டிப் பெருமான் எம் குலதெய்வம், இனி இறப்புக்காக எமனையும் மீண்டும் பிறப்பதற்காப் பிரமாவையும் கண்டு அஞ்ச வேண்டுவதில்லை என்பதில் ஆசிரியர் உள்ளக்கிடைக்கை புலனாகின்றது விடைமுழக்கம், ஆடுதிருடன் என்ற இரு புதிய துறைகளைக் கலம்பத்தில் அமைத்துள்ளார். சொல்லாட்சி, தொடையழகு, ஓசை நயம், பொருட் சிறப்பு, அணிநலம், கற்பனை வளம், சந்தச் சிறப்பு, முன்னோரைப் போற்றுதல் முதலிய சிறப்புக்கள் அனைத்தும் செறிந்த அழகிய கலம்பகமாகப் பேரூர்க கலம்பகம் அமைந்துள்ளது.

நடராசன் அடிநாடு
குடதில்லை நகர்கூடு
விடலாகும் வினை, கேடு
தொடராது, துனும்வீடே (47)

# பதிப்புரை

தவத்திரு. கஜபூசைச் சுந்தரசுவாமிகள் தமிழாய்வு மையத்தின் சார்பில் 08-6-2011 அன்று தெய்வத்திரு. ப.சு. சின்னசாமிக்கவுண்டர் அவர்களின் நினைவு அறக்கட்டளையின் நான்காம் ஆண்டு விழாவில் "கவியரசு அவர்களின் முருக இலக்கியங்கள்" எனும் தலைப்பில் சிரவை ஆதீனகர்த்தர் தவத்திரு குமரகுருபர சுவாமிகளின் முன்னிலையில் உரையாற்றும் பேறு கிட்டியது. அவ்வுரையின்போது கவியரசு அவர்களுக்கு சிரவை ஆதீனம் இரண்டாம் குருமகா சந்நிதானங்களிடம் இருந்த கேண்மை இடம் பெற்றது.

நன்றியுரை வழங்கிய ஆதீனக்கவிஞர் திரு. ப.வெ. நாகராஜன் அவர்கள் கவியரசுவின் படைப்புக்களெல்லாவற்றையும் திரட்டி வெளியிட வேண்டும் என்ற தம் விழைவினை வெளிப்படுத்தினார். வாழ்த்துரை வழங்கிய ஆதீனகர்த்தர், புலவரின் விழைவினைச் செயல்படுத்தத் திருவுளம் பற்றி ஆணை பிறப்பித்தார்கள். சந்நிதானங்களின் திருவாணையின் வண்ணம் இந்நூல்கள் வெளிவருகின்றன.

முதலில் அனைத்து நூல்களையும் திரட்டி ஒரே புத்தகமாக வெளியிடும் எண்ணமிருந்தது. புத்தகம் பெரிதாகவும் கனமாகவும் இருந்தால் படிப்பதற்குத் தோதாக இராது. எனவே தனித்தனி நூலாக வெளிவருகின்றது. இந்த வரிசையில்,

1. பழநியாண்டவர் மயில்விடுதூது.
2. தடாகம் திருமுடிசுவாமிகள் நெஞ்சுவிடுதூது
3. திருப்பேரூர்க் கலம்பகம்.
4. எட்டிகுடி முருகன் பிள்ளைத்தமிழ்.
5. திருவேரகம் சாமிநாதன் பிள்ளைத்தமிழ்
6. மங்கையர்க்கரசியார் பிள்ளைத்தமிழ்
7. திருச்சுழியல் துணைமாலையம்மன் பிள்ளைத்தமிழ்.
8. சீகாழி திருநிலைநாயகி பிள்ளைத்தமிழ்.
9. தவத்திரு கந்தசாமி சுவாமிகள் பிள்ளைத்தமிழ்

ஆகிய நூல்கள் வெளி வருகின்றன.

கவியரசு அவர்களின் நூற்றாண்டு 2002ல் நிறைவுற்றது. அவருடைய அன்பிற்குரிய தலைமை மாணாக்கரும் என்னுடைய பெருமதிப்பிற்குரிய புலமைமிக்க பல்துறை அறிஞரும் நண்பருமாகிய சித்தாந்த ஞான சரசுவதி முனைவர் ந. இரா. சென்னியப்பனார் அவர்கள் கவியரசு அவர்களின் நூற்றாண்டு விழாவினை நடத்த வேண்டும், அவருடைய நூல்களைத் திரட்டிப் பதிப்பிக்க வேண்டும் எனப் பலமுறை வலியுறுத்தினார்கள். நூல்களைப் பதிப்பிக்கும் முயற்சியினையும் மேற்கொண்டார்கள். அவர்கள் அளித்துள்ள அணிந்துரை இவ்வெளியீட்டினைச் சிறப்பிக்கின்றது.

இந்நூல்களின் வெளியீட்டினை ஊக்குவித்த திருக்கயிலாய பரம்பரை திருப்பேரூராதீனம் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் அவர்களின் திருவடிகளுக்கு நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இந்நூல்களை அச்சேற்றி வெளிக்கொணரத் திருவுளம் பாலித்த சிரவையாதீனம் தவத்திரு குமரகுருபர சுவாமிகளின் திருவடிகளுக்கு என் வணக்கம்.

இம்முயற்சியில் எல்லாவிதத்திலும், துணைநின்ற சிரவையாதீனக் கவிஞர், பெரும்புலவர் திருமிகு ப.வெ. நாகராஜன் அவர்களுக்கும், அணிந்துரை வழங்கிச் சிறப்பித்த பேராசிரியர் திருமிகு. முனைவர் ந.இரா. சென்னியப்பனார் அவர்களுக்கும் நன்முறையில் அச்சிட்டு வழங்கிய சௌமி அச்சக உரிமையாளர் தே.திருஞானசம்பந்தன் அவர்களுக்கும் என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

- பதிப்பாசிரியர்

உ

*சிவமயம்*

*திருச்சிற்றம்பலம்*

# திருப்பேரூர்க் கலம்பகம்

**காப்பு**

நேரிசை வெண்பா

பாட்டுக் களிக்குஞ்சீர்ப் பட்டிப் பெருமான்பால்
வேட்டுக் கலம்பகம்சொல் மேன்மைதரும் - கூட்டும்
அழகமரின் சொற்பொருள் ஐங்கரங்கொள் பட்டி
மழகளிறென் னுள்ளத்தே வந்து.

**ஆளுடைய பிள்ளையார் வணக்கம்**

கட்டளைக் கலித்துறை

பட்டி விநாயகர் - தலவிநாயகர்

வரும்பொரு ளின்ப மறம்பிர மன்றிரு மான்முதலாம்
பெரும்பெயர்த் தேவர் பதமுமொன் றோவெனும் பீடுமெளி
தரும்பெறன் ஞானங் குழைத்தம்மை பாலுட னார்ந்துதமிழ்ப்
பெரும்பெயல் பெய்முகிற் சம்பந்தன் மெய்ப்புகழ் பேசுநர்க்கே.

**நூல்**

**மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா**

தரவு

தெண்ணிலவு நறும்புனலிற் றிளைத்தாட முடிக்கொண்டு
பண்ணிலவு மிசைபயில்கந் திருவர்பயில் செவித்தாகிக்
கடகரியுங் கொடுவரியு மரிமானுங் கலைமானும்
படவரவு மேற்கொண்டு படிவமொடு படிநிமிரும்
பனிவெள்ளி வரைக்கயலே பரவுபுனற் காஞ்சியின்வாய்க்
கனிகொள்ளும் பொழிற்பேரூர் கனிந்தமருங் கண்ணுதலே.

தாழிசை

ஆறாறு தத்துவங்கட் கப்பாலா மிப்பால்வெண்
ணீறேறு திருமேனி தரித்துலகம் நிகழ்த்தினையே. 1

அரிபிரமற் கறிவரிய அடிமுடியை யாயிடினும்
சுரிகுழலப் பரவைமனைத் தூதாகி நடந்தனையே. 2

ஒண்கிரணத் தண்சூளா மணிபுனைந்த சடைக்குலந்தார்
வெண்டலையும் வெள்ளெருக்கும் கொண்டணிய விரும்பினையே.3

அமரர்குழாம் அமுதுண்டா ருயிர்வாழ வருள்புரிந்தே
குமுறுகடல் விடமுண்டுன் கண்டத்தே கொண்டனையே. 4

மருப்பீரா யிரமுடைய மதயானை வறிதிருப்பப்
பொருப்பனைய மால்விடையே பொருந்தியுள மகிழ்ந்தனையே. 5

அராகம்

கறைபடு துளையெயி றரவணி கலனென
நிறைசுட ருருவினி னிலவுற வனைந்தனை 1

மலைமகள் கனதன வரைபொரு முரமிசை
அலைதுயில் கமடமும் மனவொடும் அணிந்தனை 2

தாழிசை

நால்வேதம் அமரர்களுக் கந்தணனீ யெனநவிலச்
சேல்சேருங் கழனியுமு கடையனுருச் சேர்ந்தனையே. 1

ஈசனென மறைகளெலாம் இசைப்பவும்நீ இதமொழிகள்
பேசிமறை யவர்கள்மனைப் பிச்சைக்கு நச்சினையே 2

எஞ்சாமை யுலகமெலாம் முடித்தருளும் இறையவன்நீ
பஞ்சவரிற் பார்த்தன்கை வில்லடியும் பட்டனையே. 3

ஞானமறை முனிவர்புரி பூசையினும் நலமறியாக்
கானவர்தம் இறைபூசை கண்டுநனி யுவந்தனையே. 4

முச்சீரடி அம்போதரங்கம்

முன்னவற்றின் முன்னவன் நீ
பின்னவற்றின் பின்னவன் நீ
முனிவோர்க்கு முனிவோன் நீ
இனியோர்க்கு இனியோன் நீ

கருசீரடி அம்போதரங்கம்

மண்ணுநீ விண்ணுநீ வாளுநீ கோளுநீ
பண்ணுநீ பாட்டுநீ பழமுநீ சுவையுநீ

அதனால்(தனிச்சொல்)

சரிதகம்

நன்மையும் தீமையும் ஒப்ப நாடலால்
விருப்பும் வெறுப்புநீ மேவிலை யென்றே
மற்றை யாரையும் மனத்துட் கருதா
துற்றுன் புகழே யுளத்துட் கொண்டு
புன்மொழி தொடுக்க என்மனந் துணிந்தேன்
முக்கனிச் சுவையினும் மிக்கசீர் மூவர்
பாடல் கேட்ட தோடுடைச் செவிகட்
கறிவிலேன் வறுஞ்சொலுங் கோடல்
முறைமை யாகும் முழுமுத லோய்க்கே. 1

நேரிசை வெண்பா

ஓயாத ஆனந்தம் உண்டென்றுந் துன்பில்லை
சாயாத அன்புண்டு தாழ்வில்லை - மாயாத
வீடுண் டளறில்லை மீகொங்கிற் பேரூரைப்
பாடும் பணிசேர் பவர்க்கு. 2

கட்டளைக் கலித்துறை

குழகா குழகாம தேனுக் குளப்புக் குறிதலைசேர்
அழகா வழகானை யூறும் பிரான்திரு வான்பட்டியான்
பழகா பழகாப் படைக்குந் திறம்படைத் தாய்பயிலு
மழகா மழலை மொழியென ஏற்றென்சொன் மாலையுமே 3

இரங்கல்

பதினான்குசீரடி ஆசிரிய விருத்தம்

மேரு வன்ன மாட மீதி லரமியத் தலத்திலே
  மின்னை யன்ன நுண்மருங்கு லார்கள் பாடல் பாடவே
ஈர மென்ம லர்த்த டந்தி ளைத்த தென்றல் வீசவே
  யினிய தண்ணி லாவெறிப்ப வென்க ணன்ன பேதையாள்
காரை யன்ன குழல்சரிந்து கலைய விழ்ந்து சோரவே
  காதில் வேல்புகுந் துடம்பி லூசி பாய்வ தையகோ
யாரு மில்லை யோவென் மேனி யழல்பிடித்த தென்பணீர்
  அருள்செயா விடிற் பிழைப்ப தரிது பேரை யத்தரே. 4

கட்டளைக் கலிப்பா

மடக்கு

அத்தங் கொண்ட தரிமா னுடுக்கையே
அரையிற் கொண்ட துரிமா னுடுக்கையே
வைத்த தொண்களம் வாரிக் கடுக்கையே
மாலை கண்ணியும் வேரிக் கடுக்கையே
அத்தர் கொண்ட தரச வனத்தையே
அடியர்க் கீந்த தரசவ னத்தையே
பித்த ராமிவர் பேருரென் றில்லையே
பேரு ரேயென் பிறப்பிங்கொன் றில்லையே. 5

கலிவிருத்தம்

இல்லைப் பொருளை யிடத்தை யெண்ணியே
தொல்லைப் பிறப்பிற் சுழல்கை யின்றியே
ஒல்லைச் சிறியேற் குறுதி யீவையோ
மல்லைப் பேரையில் வாழும் வள்ளலே. 6

வஞ்சித்துறை

வள்ள லரசவனம் - உள்ள வினையொழியும்
சள்ளை யவைதவிரும் - எள்ள லிதுமனனே. 7

கட்டளைக் கலித்துறை

மனனே யுனக்கொன்று கேண்மதி வாழ்வெனு மையல்விட்டுச்
சினனே யவாவழுக் காறகற் றிச்சிவ னேசிவனே
இனனே புரைதிரு மேனியெம் பேரை இறைவவெனத்
தினனே நினைசிவ லோக மெளிதினிற் சித்திக்குமே. 8

சந்தக்கவி

தத்த தத்தனன தத்தன தத்தன தத்தன தத்தனனா

சித்தி யெட்டினையு முற்றவர் கற்றவர் சித்தமொ ருக்கினபேர்
மத்த கக்கரிய டற்புலி சொற்படி வைத்துந டத்தியபேர்
கத்த ருத்தவந டத்தும கத்துவ ரைக்கரு திப்பணியேம்
அத்தர் பட்டியினி லற்புதர் பொற்கழ லிற்கனி வற்றவரேல். 9

### அறுசீரடி யாசிரிய விருத்தம்

### தோழி தலைமகனது கரவுக்குறி விலக்கியது

வரைவளைத்தொ ரரவிணைத்துக் கரியவனொ ரம்பாமும் மதில்க ளெய்த
புரைவறுவெற் றியையுடைய போதிவனத் திறைவெள்ளிப் பொருப்பி னூடே
யிரைவிருப்பி னரிமுழக்கங் கேட்டகளிற் றினமறையின் மறையி லேங்கும்
விரவிருட்டி னொளிவேலே துணையாகத் தனிவாரல் வெற்ப நீயே 10

### நேரிசை யாசிரியப்பா

### தோழி குலமுறை கிளத்தியது

நீயே,
நெடுவா னன்ன நிறைபுனற் கயத்துப்
படர்புய லென்னப் பாசடை மிடைந்தே
உடுக்க ளென்ன விடைச்செறி யரும்பர்
நடுவண் மதியென மலர்ந்தவெண் ணளின
நாண்மலர் சொரிகள் நகையாச் சுரும்பர்
குறவ ரொளித்த குடவரைத் தேனின்
மணத்துக் குழலும் வளநாட் டிறைமகன்
அவளே,
முதலை யுண்ட மதலையை யழைத்த
பொய்யாப் புலவன் பொருளா றலைத்துக்
கவர்சிவ வேடக் கள்வ ரிருந்த
மங்கலில் தொல்சீர்க் கொங்கு நாட்டில்
சீரூர் மேன்மைப் பேரூ ரிறைவர்
வெள்ளி வெற்பிற் கொள்ளைகொண் டுண்ணும்
குறவர் மடமக ளைய
அறவே பொருந்தா தவளைவேண் டுதலே. 11

### கட்டளைக் கலித்துறை

### யமகம்

தலைமாலை பாம்பாமை யோடணி சாந்தம்வெண் சாம்பல்பொன்ம
தலைமாலை யார்க்கெருக் கூமத்தை மாலைதாய் தந்தையின்மோ
தலைமாலை வாரிநஞ் சூணுரி யாடையர் தாமனிதர்
தலைமாலை யுற்றனள் பேதையந் தோவென் றவத் தையலே.12

### நேரிசை வெண்பா

வெறிவிலக்கல்

தையலுக்கம் மாறபாணன் தந்தருளி னுய்யலாம்
ஐய வொருவ ருடையழித்தென் - பையுறுநோய்
நீக்க விரும்புதிரே னீவிர்பே ரூரிறைவன்
தேக்கமழுங் கொன்றைகொணர் திர். 13

### கட்டளைக் கலிப்பா

சித்து

கொன்றை வேணிப்பட்டீசர்க்குப் பித்தளை
கோதில் பொன்னென்று மையிட்டுக் காட்டினேம்
அன்றை மாலுக் கிரும்பையு மாடகம்
ஆக்கினோமக னாகம்பொன் னாக்கினேம்
இன்று கஞ்சத்திற் பொன்னையு மாக்குவேம்
இரதங் கூட்டிச் செப்பிலுரை யேற்றுவேம்
ஒன்று சொன்னத்தை வேறாக மாற்றுவேம்
உணவுதாரு முமக்கென்ன வேண்டும். 14

### எண்சீரடியாசிரிய விருத்தம்

வேண்டத் தக்கன யாவையு மறிந்தே
வேண்டு மன்பர்கட் கருளுமெம் மான்என்
றாண்ட கைத்திரு வாதவூ ரடிகள்
அருளிச் செய்ததை யறிந்துமீ தென்னே
ஈண்ட லைப்படு துரும்பென மனனே
யின்பதுன் பத்தி னிடைச்சுழல் வதுதான்
நீண்ட சோலைசூழ் பட்டிநா யகன்றாள்
நினைந்தெ மக்கெனென் றிருவிது சுகமே. 15

### கட்டளைக் கலித்துறை

யமகம்

சுகமென்று பீறற் குடிலிதைப் பேணிமென் தோகையர்கிஞ்
சுகமென்று நாறெச்சி லுண்டு சுழலுந் துரிசொழிந்தே
சுகமென் றமிழ்தே ரரசம் பலவ துகளறுசிற்
சுகமென்று சேர்வது நின்னடி யாரடித் தொண்டு பட்டே. 16

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

பட்டுந் துகிலும் உடுத்தாலும்
 பைம்பொற் பணிக டொடுத்தாலும்
இட்டங் கொளவறு சுவையடிசி
 லிருபோ தயிலினு மொருநாளைச்
சுட்டுண் டழிவது தவறாதே
 துணையோ வுடலிது பேரூரில்
நட்டம் பயில்சிவ பெருமானை
 நாடா துழல்மதி கேடீரே. 17

### கொச்சகக் கலிப்பா

கேடுதரு வினைகெடுக்கும் கிளர்சிவஞா னங்கொடுக்கும்
பீடுதரு கல்விதரும் பெருஞ்செல்வந் தருந்தருவிண்
நாடுதரும் வீடுதரும் நளிர்ராசம் பலநடுவே
ஆடுதரு மவ்விடைய னடித்தொண்ட ரடித்துகளே. 18

### நேரிசை வெண்பா

திரிபு

அடிப்பட்டி யான்முனிவர்க் காடுமருளாளா
மிடிப்பட்டி யான்மெலிந்து வீணே - செடிப்பட்டி
மானிடரைப் பாடாத வண்ணம் பணியடிய
னேனிடரைப் பாட்டையொழித் தேல். 19

### எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

ஊசல்

ஏலநறுங் குழலாட மாலை யாட
 இமிர்ந்தினவண் டாடமதி நுதல்வே ராடச்
சாலவடி காதாடக் குழைக ளாடத்
 தளர்ந்துகொடி யிடையாட வளைக ளாடக்
கோலமட மயிலனையீ ராடி ரூசல்
 குளிர்முத்த மணிநகையீ ராடீ ரூசல்
பாலனைய மொழிமடவீ ராடீ ரூசல்
 பட்டீசர் பேர்பாடி யாடீ ரூசல். 20

ஆறுசீர் ஆசிரிய விருத்தம்

ஊச லாடுமிவ் வுடலுயு ரொடுபொரு
    ளுன்கை யிலொப் பித்தேன்
தேச மார்திரு நீறணிந்
    தேன்திருநா மமேசெபித் திட்டேன்
வாச மாமல ரிட்டுன தடிமலர்
    நாடொ றும்வழி பட்டேன்
ஈச னேயர சம்பல வாண
    னேயினி நமற்கிளை யேனே. 21

எண்சீராசிரிய விருத்தம்

இரங்கல் – மடக்கு

இளையாண்மத னிளையான்விடு கணையான்மெமி ளைத்தாள்
    எய்யாதரு கமரேழையர் செய்கைக்குள மெய்த்தாள்
விளையாவனல் சுடுவேயிசை முடையாயர்வி ளைத்தார்
    மெல்லாதக ரும்பொத்தவள் பொல்லாதவ மென்றான
தளையானவை தவிர்வேடுவர் தருமூன தளைந்தாள்
    தனதென்றொரு பேரூரிலன் பேருருளன் தாமம்
திளையாவிடி லுயிர்வாழ்வது மிலையென்றுதி கைத்தாள்
    சிவனார்திரு வுளமெப்படி யென்றேதெரி கிலமே. 22

கட்டளைக் கலித்துறை

ஆன்பட்டியான்

மேம்படு மண்டர் தலைவன்மன் றாடியொர் வெள்விடையான்
காம்படு தோட்சிற் றிடைச்சி மகிழ்கயி லாயனின்ப
மாம்படி யாட்டிடை யன்றில்லைக் கோன்திரு வான்பட்டியான்
ஓம்பிடு வான்பசு யாவு மிடுக்க ணுறாவகையே. 23

எண்சீர் ஆசிரியவிருத்தம்

சம்பிரதம்

கையகத்து வரையடக்கிக் காட்டு வோமேழ்
    கடலையுண்போம் கதிர்களையுங் கையில் வைப்போம்
வெய்யகடுங் காற்றுகளைத் தூசி னாலே
    விலக்கிடுவோம் கனலைமென்று விழுங்க வல்லோம்

வையகத்தை யோரிமைப்பின் மறைப்போ மிந்த
மண்மீது வானகத்தை வைகச் செய்வோம்
பொய்யிலவர்க் கருள்பட்டிப் பெருமான் போலப்
போற்றுபவர்க் கருள்பவரும் காட்டு வோமே. 24

### அம்மானை

காட்டிலே வேட்டுவன்பைங் கடலில் வலைவாணன்
நாட்டிற்பள் என்பட்டி நாதன்கா ணம்மானை
நாட்டிலே பள்ளனெனில் நான்மறையோ ரீங்கிவனை
வீட்டிலே சேர்த்துகின்ற மேன்மையென்ன வம்மானை
வீட்டுக் குரிய விகிர்தன்கா ணம்மானை. 25

ஐயர் திருப்பேரூ ரம்பலவர் யாவர்க்கும்
மெய்யே பொதுவில் விளங்குகின்றா ரம்மானை
மெய்யே பொதுவில் விளங்குகின்றா ராமாயின்
தையா லிவரென்ன சாதிகாணம்மானை
சங்கரர்க்கு மோர்சாதி சாற்றுவரோ வம்மானை. 26

### மடக்கு

மானிருந்த விடக்கையார் அடியார் வருந்தி விடக்கையார்
மதிமலிந்தசெஞ் சடையினார் களங் கொதியிருந்த நஞ்சடையினார்
தேனிருந்தநல் லிதழியார் ஒரு பாலிருந்த மெல்லிதழியார்
செங்கை கொட்டிட வாடுவார் அவள் சங்கை பட்டிட வாடுவார்
ஆனிருந்திடு பட்டியார் எம தூனிருந்திடு பட்டியார்
அமரர்விஞ் சையர்தானவர் முத லானவர்க் கரிதானவர்
யானிருந்தணி புன்சொலுங் கொலுமோ பவந்தணி யன்பரே
அடியனேனையு மாளுமோ வினை நொடியிலே இனி மாளுமோ. 27

### நேரிசை வெண்பா

மாளாத மாலான்மேன் மால்போற்ற வந்தனையான்
மாளாத மாலும்மான் மானுற்றாள் - ஆளாயோ
தேரூர் நெடுவீதித் தென்றலுலா முன்றில்பயில்
பேரூர்ப் பெருமானே பேசு. 28

### எண்சீர் ஆசிரியவிருத்தம்

பேச்சுமனங் கடந்தபட்டிப் பெருமா னேநீ
பேணிவலிந் தாண்டமறைப் பெருமாளுக்கே

ஏச்சுறமுன் ஒளித்தனையிங் கென்று காட்டும்
ஏற்றினையு முனிந்தனையென் றறிந்து மேழை
நாச்சிறிது நாணாமே யருடா வென்னும்
நயனமுனைக் காணவிழை தரும்பே ராசைப்
பேய்ச்சிறியேன் நாய்க்குணத்தேன் பித்த னேனென்
பிழைபொறுத்திங் காள்வாயோ பிணங்கு வாயோ 29

தலைவி கூற்று

கட்டளைக் கலித்துறை

பிணங்கி யவர்பாற் பிழையே கணிக்குமென் பேதைமனம்
மணங்கிளர் கொன்றையந் தார்ப்பட்டிலிங்கர் மலரடிக்கே
வணங்கிய சென்னியெ மன்பர்வந் தால்வல் விரைந்தணைய
இணங்கி யறைபோ மிதுவென் னறிந்தில னேந்திழையே. 30

தரவு கொச்சகக் கலிப்பா

இழைகொண்ட இடையுமைசே ரிடப்பாலும் இளமதியும்
மழைகொண்ட மணிக்களனும் மலர்முகமும் மலைத்தோளும்
பிழைகொண்டு தொண்டர்கள்பாற் பிணங்காத பேரூரான்
தழைகொண்டு தயைபுரிபூந் தாளுமுளந் தரித்தேனே. 31

புய வகுப்பு

தனனதன - தனனதன - தனனதன - தனனதன
தனனதன - தனனதன - தானாதனந்தன

தரியலர்கள் திரியுமெயி லெரிமுழுக நெடியகணை
சயிலமெனும் வளைசிலையி னோடே நிமிர்ந்தன
சதுமறைகள் தெரியுமலர் உறுபிரம னெறிதவறு
தருணமவ னுயர்தலையை மேனாள் தடிந்தன
சகமுழுது முதவுமொரு முதல்வனிலை யெனுமுனிவர்
தழலில்வரு முழுவையுரி மேலே கவிந்தன
தருவினிழ லமரமரர் மடவியர்கள் குவளைநிகர்
தடவிழிகள் பெரியமய லோடே துளைந்தன

கரியமுகி லனநெடிய குழலிமைய மயிலினிரு
கனவரைக ளனமுலைக ளாலே குழைந்தன
கவுணியர்கள் குலமதலை யரசுமுத லியபெரியர்
கனிவுமிகு தொடைவிழைவி னாலே புனைந்தன

கடிகமழும் அமரரிடு மலரினொடு மெனையனையர்
கருதியிடு மெளியதழை நீரா னனைந்தன
கரடதட விகடமத கரிமுகவ ரொடுமுருகர்
கமலசர ணுறவுவகை யாலே வளர்ந்தன

பிரியமுட னினியவிசை புகலுமிரு குழைகளொளி
பெருகவமர் தலினொளிகள் சேர்மேரு வென்றன
பெரியபண முடையதலை பலவுடைய பணிகள்பல
பெருகொளிய பணிகளென வேவாழ் வமைந்தன
பிரணவசொ ருபமுடைய நறுமதலை யுதிர்பொடிகள்
பிதிர்கனக மெனவொளிர வேரா னிறைந்தன
பிழைபடுத லரியகணை விசையனொடு வழுதியடி
பிரியமுட னமையவழ கோடே யமைந்தன

அரியதென விரவலர்கள் விழையுமெவை களையுமவர்
அருகஇறு குதலிலர்கள் வாழ்வான கொங்கினில்
அளிகள்தெனை கமுகுசுர புனைகுரவு மகிழ்பிடவம்
அலரிமுத லியமலரி லேதே னருந்திவி
லரிசெவழி பயில்புறவொ டனவயல்கள் புடைதழுவு
மரியபல புதுமைமிகு பேரூ ரிலும்பர்கள்
அடியவர்கள் அடிபரவ வுயிர்கள்பர கதியடைய
அரசவையி லமர்பரமர் வாகார் புயங்களே. 32

நேரிசை வெண்பா

தோழி கூற்று

புயங்கா புயங்கவெனப் போற்றினாள் சிந்தை
தியங்கா வுழையர்ச் சினந்தாள் – முயங்கு
வரங்கா தலித்தாள் வடகயிலா யத்தாய்
இரங்காத தென்னோ விவட்கு. 33

கட்டளைக் கலித்துறை

விருந்து கண்டொளித்த ஊடல்

இவளைப் புகழ்வதிங் கென்சொல்லி யேந்தல்செய் இன்னலெலாம்
தவளப் பொடியணி யன்பரொ டேயவர் சார்தல் கண்டு
தவலுற்ற கட்செங் கமலங் குவளைத் தகையுற்றவே
பவளத் தடவரை நேர்பட்டி லிங்கர் பதியகத்தே. 34

பன்னிருசீர் விருத்தம்

பதியென்று நிதியென்று மனையென்று மகவென்று
பாசத் தழுந்தி யேயெட்
பகவென்று மிரவலர்க் கீயாத புரவலர்கள்
பாலென்று மேகி யேகிக்
கதியென்று நீரெமக் கென்றுபொய் நினைந்துபுன்
கவிபாடி யமைய நாடிக்
காலென்றும் நோவதல் லாமலே செல்லாத
காசொன்று பெற்ற துண்டோ
துதியென்று வசைபேசி னாலுமேற் கும்சுயஞ்
சோதியை யாதி தன்னைத்
தொண்டர்பிழை பாராத பெருமானை நஞ்சந்
துலங்குங் கறைக்கண்டனை
அதிதுங்க விடையேறி வருகோவை மீகொங்கில்
அணிகாஞ்சி வாய்ப்பேரையில்
அழகுமிகு மரசவைமி லருணடன மிடுமிறையை
அடைமினிரு மையும டைவிரே. 35

எழுசீர் ஆசிரிய விருத்தம்

சுனைவியந்துரைத்தல்

அடையார் புரங்கள் சுடுமாறு செங்க
ணழலேவு மெங்க ளிறையார்
விடையா ரிருந்த பதியான கொங்கின்
மிகுபே ரையின்கண் மடவாய்
குடைவோர் கருங்கு ழலின்மே லணிந்து
விடுமோ குளிர்ந்த தொடையே
படைநேரு முன்கண் செவிதாக் கிடுங்கொல்
படுவோர் தருங்கொல் சுனையே. 36

எண்சீர் ஆசிரிய விருத்தம்

தோழி அறியாள் போன்று குறியாள் கூறல்

சுனைமலர் கொய்திடுவார் சுரிகுழல் பெய்திடுவார்
தோகையொ டாடிடுவார் ஓகையொ டோடிடுவார்
கனைகுர லருவியொடே கானமு ழக்கிடுவார்
காசுக லன்கலென வூசலு கைத்திடுவார்

அனைநிகர் தயையுடையார் அரசவை யுறைமிறையார்
ஆதிபுரிக் கிணையாம் ஆயிர மாதருளார்
நினைமயல் செய்தவளெப் புனையிழை யெனமொழிவாய்
நேய மிகுந்துவருங் காயிலை வேலவனே. 37

### களிறு வினாதல்

### கட்டளைக் கலித்துறை

வேலனுங் கும்விழி யீரெங் கடுங்கணை மெய்யுறலாற்
கோலனுங் கொங்கையொக் குந்திரட் கொம்பின் கொலைக்களிறு
காலனுங் குங்கடுப் போடிப் புனம்வரக் கண்டதுண்டோ
மாலனுங் கும்பிடு பட்டீசர் வெள்ளி வரையகத்தே. 38

### தரவு கொச்சகக் கலிப்பா

### குயில்விடு தூது

தேமாவின் பானாறும் செந்தளிர்க ளவைகோதிக்
கோமாரன் காகளமாய்க் கூவுமிளங் கோகிலமே
ஆமாறு தொழுமடியார்க் கருளுமர சம்பலத்தெங்
கோமானிங் கெழுந்தருள மகிழ்ந்தொருகாற் கூவாயே
குளிர்பொழில்சூழ் பேரூரான் குறுகவெனக் கூவாயே. 39

### எண்சீர் விருத்தம்

### காலம்

வாய்திறந்து பெருங்கொண்டல் முழங்குகின்ற காலம்
வள்ளூசி போற்றுளிகள் வழங்குகின்ற காலம்
ஓய்தலின்றி முல்லைசிரித் தலர்தூற்றுங் காலம்
ஒறுத்துமதன் றுணைப்பிரிந்தா ருயிர்காற்றுங் காலம்
சேய்நடுவிற் பொலியுமர கதவல்லி யுடனே
சேவேறி வரும்பட்டிப் பெருமான்சே வடிக்கே
நேயர்நமைப் பிரிந்துபொருள் தேடுகின்ற காலம்
நிறையழிந்தெம் முடலிடைபோல் வருந்துகின்ற காலம். 40

### வஞ்சி விருத்தம்

அம்மா அரசம் பலவன்
அம்மா லயனுக் கரியான்
இம்மா லடியார்க் கெளியான்
பெம்மான் அருளோ பெரிதோ 41

பதினான்குசீர் கழிநெடிலாசிரிய விருத்தம்

பெரியவாய்ம தங்கள்பேசி வந்ததூத கேளடா
பிளிறுவேழ முழுவைசிங்க மானவல் விலங்குகொன்
றுரிவைகொண்டு பேரைமேவி யுறையும்வேட ருறவினேம்
உறுதியற்ற வரசரோடு முறவுகொள்ள விசைவமோ
கரியினோடு சிங்கமுங்க டந்தொரத்தி மீதிலே
ககனமேவு கொக்கினைக்க டிந்தவேட னுக்குமுன்
அரியவீர மெண்ணியாம்வ ளர்த்தபெண்ணை மீந்தனம்
அரிதினீன்ற பெண்ணையுங்க ளரசினுக்கு மீவமோ. 42

எண்சீர் ஆசிரிய விருத்தம்

வம்பு பேசிய நம்பியா ரூரன்
மணத்தி லாவணங் காட்டிவந் தாண்டீர்
நம்பு தொண்டனேன் வலியவாட் செயினும்
நவின்றி லீரொரு நல்லுரை யேனும்
கொம்ப னாளொடுங் கொடுமழு வேந்திக்
குலவு பேரையி லரசவை நின்றீர்
நம்ப ரேநடு விகந்திரந் துண்டீர்
நக்க ராயினீர் நாணிழந் தீரே. 43

நேரிசை வெண்பா

ஈர மதிக்கின்றா னெம்முடலை யம்மதவேள்
ஈர மதிக்கண்ணி யீர்மதியீர் - ஈரைந்து
கையீர் புரமடுந கையீர்பே ரூரிலிருக்
கையீர்கை யீர்கடன்காக் கை. 44

கட்டளைக் கலிப்பா

கைகளுண்டு தொழவலஞ் செய்திடக்
கால்களுண்டு கனிந்து நினைந்திடப்
பொய்யிலாத நெஞ்சுண்டு புகழ்ந்திடப்
புனித நாவுண்டு புன்மை யொன்றில்லையே
பெய்யுந்தேனுண்டு வண்டுறங் கும்பொழிற்
பேரைமேய பிரானுண் டருள்செய
ஐயமுண்டு கொலோநமனா ரைவென்
றடைவதற்கழியா வின்ப முத்தியே. 45

சந்தப்பா

தத்தனத் தனத்த தந்த தத்தனத் தனத்த தந்த
தத்தனத் தனத்த தந்த - தனதானனா

முத்தினைப் பதித்த பந்த மற்றிடப் புடைத்தெ ழுந்து
முக்கடக் களிற்றை வென்ற - முலைமாதரார்
முக்கனிச் சுவைக்கு மெஞ்ச லிற்சருக் கரைக்கு மொஞ்சல்
முற்றிடச் செய்விக்கு மின்ப - மொழிபேசுவார்
சத்தியத்தி யத்திவந்து நத்தரைக் கறுத்தெழுந்து
சட்டநிற் களத்த டங்கு - விடநேர்கணார்
தத்துமிக்க பொய்த்த வின்ப முற்றிடக் கணித்த லைந்த
சத்திலிக் கருட்செய் தன்பு - தரநேர்வையோ
பைத்தலைத் தொழுக்கிடந்தொ ருத்தரக் கிரிக்கணின்று
பத்தர்புத்தி யிற்செல் கின்ற - விடைவாகனா
பச்சிலைக் கடுக்கை தும்பை நொச்சியுட் கெருக்கணிந்து
பற்பனுக் கொளித்து யர்ந்த - முடியாளனே
சித்திபுத்தி முத்தி யின்ப முற்றவர்க் களிக்க வென்று
செப்பிடற் கிலக்க மின்றி - யுருவானவா
செக்கரொத்த சொக்க வெங்கு மொப்பறக் குடக்கி லங்கு
சிற்சபைக்கு ணிற்கு மெங்கள் - நடராசனே. 46

வஞ்சித்துறை

நடராச னடி நாடு - குடதில்லை நகர் கூடு
விடலாகும் வினை கேடு - தொடராது துனும் வீடே. 47

கலி

பதினான்குசீர் ஆசிரிய விருத்தம்

வீட வாவிய முனிவர் மாதவ மேவிடிற்களி கொள்ளுவார்
மிக்க நூல்பயில் புலவர்மேதை விரும்புவார்மறை நெறியினார்
கோட லெள்ளுவரோவின் சாதியொர் குறைசொல் வாரெவர் சாலியை
கொங்கி லுங்குறை யுண்டு கொல்குடி வாழ்க்கை நேரறங் கூறுவீர்
பாடல் சால்புகழ்ப் பட்டிலிங்கர் பதத்தி லென்னே யொழுக்குநேர்
பத்தி யாளரு நீப்ப ரோகுளிர் பான முண்டவ ரேயதன்
ஈட றுஞ்சுக மோர்வர் மெய்யநு பூதியெய்தின ரேயலால்
இன்ன வாறெனை வோர்த லுஞ்சொல வல்ல ராவது மில்லையே 48

பெயர்கேட்க விரும்பல்

இலகியசெந் துகிரனைய வெழில்வாய பைங்கிளியே
நலமிகுபா னறவுகனி நயந்துண்ண நான்றருவேன்
அலகிலிரு வினையழித்துள் ளானந்தத் தேன்சொரியும்
இலகியசே வடிப்பெருமான் திருநாம மியம்பாயே. 49

மூவருமாய முழுமுதல்

தானன தத்தன தானன தத்தன தானன தத்தனனா

பாயக லைத்திரள் யாவும ளித்தருள் பானிற வுத்தமியாள்
பாரதி யைத்திரு நாவினில் வைத்துல கானப டைத்தவனும்
சேயநி றத்திரு மாதுக வுத்துவ மேயவு ரத்தனுதா
சீனம றப்புவி யாவும ளித்தொரு நாளவை துய்ப்பவனும்
தூயப ரைக்கொரு பாகம ளித்துல கியாவு நொடித்திமையோர்
சோதியு டற்பொடி மேனித ரித்தருள் சோதியு முய்த்துணர்வீர்
ஆயென வெய்த்திடு வோரைய ளித்திடும் ஆறையி னிற்றவமே
வான்வழி பட்டிடு போதிவ னப்பிற வானெறி யுத்தமனே. 50

கட்டளைக் கலித்துறை

போதிவ னத்தயில் காயெனத் தாய்சொலப் போந்தவனும்
போதிவ னத்தல மென்னும் பிரமனும் போற்றிசைப்பப்
போதிவ னத்தமர் சோதியைப் போற்றுதும் புன்மையறப்
போதிவ னத்திருத் தொண்டரைக் கூடுதும் போதமிதே. 51

கட்டளைக்கலிப்பா

தமருந் தந்தையும் தாயும் தமையனும்
தமிழும் சைவமும் தந்த தயாளனும்
எமனை யும்பிர மாவையு மஞ்சிடா
தின்ன ருள்தரு மெங்குல தெய்வமும்
குமரன் தாதை மரகத வல்லியோர்
கூறனேற மருங்குணக் குன்றுவிண்
அமரர் கோமுனி பட்டி முனிக்குமுன்
அரச வைக்கணின் றாடு மமுதனே. 52

### வேற்றொலி வெண்டுறை

ஆடுகின்ற சேவடியா னரியதனு கரணமொடு புவன போகம்
கூடும்வகை யுயிர்க்களித்துக் கூத்தாட்டு மரசவையெங் கோமான் தாள்கள்
அணிமா மலர்கொடு தாழ்பவர்
அயிரா வதமிசை யேறுவர்
அனமே றுவர்மயி லூருவர்
அடலார் கருடன்வெந் மேவுவர்
அழகார் விடையை நடாவுவர்
அமரோர் தொழநனி வாழ்வரே. 53

### தோழி தலைவியைத் தேற்றல்

அறுசீர் ஆசிரிய விருத்தம்

வாழும்வகை யெமதுயிர்தங் கையுடைய
வள்ளல்மொழி மாறு மாயின்
வீழுமவர் சடைப்பட்டிப் பெருமான்மெய்த்
தொண்டர்தமை வீட்டக் காலன்
சூழுமடி ஞானத்தால் துரியநிலை
கடந்தவர்தம் தூய சிந்தை
தாழுமல மாயையினில் தளருமிடை
வளருமுலைச் சயில மானே. 54

### சந்தக்கவி

தனன தனதன தனன தனதன
தனன தனதன - தனதனா

சையில மிருபிறை தவழ வருவதோர்
தகைய கரியினை யுரிசெய்தாய்
சையில மடமகள் வளரு மிருதன
சையில முழுபுய சையிலனே
சையில வளைசிலை யுடையை யுருவனே
சையில மிசையிலை யுருவனே
சையில நிகருமு பரிகை மலியர
சவனமுறைசிவ வடியரேம்
சையில நடலைகொ டுமைக ளிலமொரு
தளர்வுமிலமட மகளிரா

சையில நிலநசை யிலமொர் பொருணசை
யிலம்வினைகளி னசைவமோ
சையில முடியர ணுறையு மவர்தமை
நலிவ துகொல்கிரி டியினினம்
சையில மெனநிலை பெறுவ மெனுமொரு
தயிரி யமடைய அருள்வையே. 55

கொற்றியார்

பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்

வையா நசையா ரெந்நாளும் மாலார் பஞ்ச ராத்திரியார்
வருந்து ளவத்தார் குறைதீர வண்மை நீரான் மண்ணிடுவார்
மெய்யா மன்பாற் சங்கரிதன் விளங்கு நாமம் விளம்பிடுவார்
மேவும் பேரை நகரினிலே வீதி தோறும் திரிந்தேநீர்
பொய்யா மிடையால் கனதனத்தாற் புதிய திருவாய் மொழியினால்
புதுக்கி மாலார் நெறிவளர்க்கப் புறப்பட டீரே கொற்றீரே
உய்யா ரிந்த வூரார்நீ ருவந்து திருக்கண் ணமுதளித்தும்
உரத்த சடகோ பமுங்கரத்தி லுதவா விடின்வீழ்ந் தொழிவாரே. 56

கொற்றியார்

எண்சீர் ஆசிரிய விருத்தம்

ஒழியாமலி ராமானுச மென்றேமொழி கின்றீர்
உம்மாணையி ராமானுச மென்றேமொழி கின்றேன்
வழிதேன்மிகு துளவந்தனை மார்மீதுத ரித்தீர்
மாலேமிகு துளவந்தனை மார்மீதுத ரித்தேன்
அழியாவினை யதிருந்திரு மண்ணங்கம ணிந்தீர்
அழகீரடி யுதிருந்திரு மண்ணங்கம ணிந்தேன்
பழியீரினி யானுந்திரு மாலின்னடி யானே
பட்டிப்பதி வாழ்கொற்றியிர் நட்புற்றணை வீரே. 57

காமமிக்க கழிபடர் கிளவி

அறுசீர் ஆசிரிய விருத்தம்

அணைமீதி லமையாமற் புரள்கின்றா
யலைகின்றா யரற்று கின்றாய்
துணையார மோடுவளை களையெறிந்து
கண்ணீருஞ் சொரியா நின்றாய்

இணையாரு மில்லாத பேரூர
    ணடிக்கன்ப ரிச்சை யாலோ
உளையாநின் றாய்கடலே பெரியோரும்
    ஊழ்வினையை ஒதுக்கல் ஆமோ. 58

கட்டளைக் கலித்துறை

ஆமோ தமியன்புன் சொல்லர சம்பலத் தாரமுதே
தாமோ தரய னாதிவிண் ணோர்சொலும் சார்வரிதே
யாமோ தரியதென் றேமறை யோதியி ளைத்திடுமே
நாமோத நஞ்சுண் டமுதிமை யோர்க்கு நயந்தவனே. 59

விடைமுழக்கம்

அறுசீர் ஆசிரியவிருத்தம்

நயந்துவிடை முழங்கமழை யிடியென்று
    கொன்றைநகும் நவ்வி யஞ்சி
உயர்ந்தசடைக் காடுபுகத் தாவுமுரத்
    துமைமுலைகள் உற்ற புற்றில்
புயந்தழுவும் பாம்பினங்கள் பயந்துபுகும்
    கங்கைபொங்கும் பொழில்க டோறும்
வயந்தனிளந் தேருலவும் பேரைநக
    ரரசவைவாழ் வள்ள லாரே. 60

வலைச்சியார்

எழுசீர் ஆசிரிய விருத்தம்

ஆரல் கெண்டைவ ரால்கெ ளுந்திநெ
    யயிரை யாதிய மீனினம்
வாரி வந்துசெ வாய்தி றந்துப
    கர்ந்தி யங்குவ லைச்சியீர்
வேரல் பம்பிய காஞ்சி யின்கரை
    மேய பேரையின் விடர்களும்
மூரல் முத்தமிழ் தழைத்து கிர்க்குமு
    லைக்கு மாவியை விற்பரே. 61

### நேரிசை வெண்பா

வலைச்சியார்

ஆவியா மீன்பிடிக்கு மாரணங்கே பேரையிலெம்
ஆவியா மீனுமதி யாமுகத்திற் - காவி
விழிவலையில் வீழ்ந்து விடுபடா தேங்கும்
பழிவலைநீ வீழ்தல் பழுது. 62

### எண்சீர் ஆசிரிய விருத்தம்

பழுதகன்ற மதுரமிஞ்சு பனுவலொன்று புனைகிலேன்
பரிவொடுங் கண்மல ரணிந்துன் னடிகணெஞ்சி னினைகிலேன்
இழுதுவிஞ்சு கறியொடும்ப லமுதமன்பர் நுகருமா
றிடுகலன்செய் திலனொர் தொண்டு மெளியனன்பு பெறுவனோ
இழுதையென்கை விடிலழிந்து விடுவல் பின்பு கருணையோ
டெவர்வி ரைந்துகுறை களைந்து கதிதருஞ்செய் கையில்வலார்
தொழுதுநின்ற கரவிடும்பை யொழியவின்பு தரவலாய்
சுரபிதந்த குழவிகொம்பு குரமமுந்து சுவடனே. 63

### குறம்

பன்னிருசீர்க்கழிநெடில் ஆசிரிய விருத்தம்

அன்னே மருத மலைக்குறவ னப்பன் வெள்ளி மலைக்குறவன்
ஆத்தாள் பச்சை மலைக்குறத்தி யவர்க ளெல்லா மெமக்குறவர்
சொன்னேன் குறியும் பொய்யாமோ தோகா யுன்ற னுளங்கவர்ந்த
தோன்றல் இயல்பை யாதென்று சொல்வேன் யார்க்குஞ் சொலற்கரிய
கன்னா ருரிக்கும் வல்லாளன் கனக மலைசேர் வில்லாளன்
கலந்தும் பிரிந்தும் காணரியான் கடியார் பொழில் பேரூரன்
முன்னான் பின்னான் பேரில்லான் மோசம் புரியா னேசர்தமை
முயங்குங் கடிதி லுனைமானே முடிய வின்ப முன்னாமே.64

### வெண்பா

முன்னு முனக்கடிமை முன்னினேன் மோழையேன்
பின்னு முனையன்றிப் பின்செல்லேன் - அன்னை
அனையபிற வாநெறிவா ழப்பனே யொப்பேன்
எனையபிற வாநெறியு மே. 65

அறுசீர் ஆசிரிய விருத்தம்

ஏறுளதா லுழுவதனுக் கிருவருளர்
சிறுவரதை மேய்க்கக் கங்கை
யாறுளது பாயமனை யாட்டியுள்ள்
பானைபிடித் தாக்கக் கோடி
தேறுதொண்டர் குற்றேவல் செய்யவிருக்
கின்றனரூழ்த் திறமோ எங்கள்
பேறுதருந் திருப்பேரூர்ப் பெருமானே
யெடுப்பதென்னீ பிச்சை தானே. 66

பிச்சியார்

அறுசீர் ஆசிரிய விருத்தம்

பிச்சியார் கரியகுழற் பச்சைநா
யகியிடத்திற் பிரியா வேத
உச்சியார் பேரூரி லையம்பெய்
யென்றுதெரு வுலாவு கின்ற
பிச்சியா ரேமார னையம்பெய்
தானுமெழிற் பெருக்கை நோக்கி
யிச்சியார் யாரேயெம் முயிர்க்கையம்
பெய்கின்றீ ரிதுத காதே. 67

வண்டோச்சி மருங்கணைதல்

கட்டளைக்கலித்துறை

தகுமோ தரியலர் மும்மதி லன்று தழன்முழுக
நகுமோ தரிய புகழ்ப்பட்டி நாதரை நாடலர்போல்
இகுமோ தரிப்பரி தேமுலைப் பார மிடையிடுக்கண்
மிகுமோ தரியினங் காளினி யீர்ங்குழன் மேவன்மினே 68

மேகவிடுதூது

மேவினீ ராயிற்றண் மேகங்காள் பேரூரில்
ஓவியமே ஒக்கு முருவத்தெம் - மாவியினைக்
கண்டுனன்ப னின்றுவந்து காணுமெனி னானிலமேல்
உண்டு புணியங்க ளுமக்கு. 69

கட்டளைக்கலிப்பா

உமைகலந்து பசந்தசெம் மேனியா
ரோங்கு பேரையிற் றீம்புன லாடியே
இமைகலந்திடு முன்வருவாளெம
தின்னு யிர்த்துணை மின்னிடைப் பேதையாள்
கமைகலந்தமைக் கண்சிவப் புந்துகிர்க்
கடிகையன்ன விதழ்வெளுப் பும்மலால்
அமைகலந் தமென்தோ ளணங்கேநுமில்
அரிது வேற்றுமை யார்க்கு மறிதலே. 70

எண்சீராசிரிய விருத்தம்

அரியபல கலைகளெலா மறிவா ரேனு
மைந்தடக்கித் தீயினிடை நோற்பா ரேனும்
பெரியபல சித்தியெல்லாம் வல்லா ரேனும்
பெரியரென நினைவதனுக் குரிய ரோதான்
கரியமுகி னெடியசிலை யொடுவந் தன்ன
காளத்திக் கண்ணப்ப னெச்சி லுண்ட
பெரியபொரு ளானதிருப் பேரூ ரீசன்
பெருந்தொண்டர் தமையறியாப் பேதை யாரே. 71

வெண்பா

பேதைமையால் வாய்மதங்கள் பேசிநாள் போக்குவிரேல்
வாதைமையால் வன்மறலி வந்தக்கால் - ஏதுசெய்வீர்
நிச்சமிலை யேனுமிட்டு நின்மலன்பே ரூர்நினைமின்
அச்சமிலை யச்சமிலை யாம். 72

எண்சீர்ஆசிரியவிருத்தம்

இலைமலிந்த வேனம்பி யிடையே மேவ
இடப்பாற்சிற் றிடைப்பச்சை வல்லி மேவ
அலைமலிந்த புனற்கங்கை யாடுந் திங்கள்
அமுதநில வெறிந்துமுடிக் கணியாய் மேவ
மலைமலிந்த திண்டோண்மேற் கொன்றை மேவ
மழவிடைமேல் வருங்காட்சி வழங்கு வாயே
குலையலிந்த தேமாவின் பொழில்க டோறும்
குயினுழையுந் திருப்பேரூர்க் கோயிலானே. 73

கூடல்

பதினான்கு சீராசிரிய விருத்தம்

கோயி லாக நீடு போதி நீழன் மேவு குழகனார்
கோதி லாத பேரை யாளு நீதி யாள ரருளைநேர்
பாய வாரி வாரி யுண்டு தீயை வீசி மின்னியே
பருவ மேக நிரைக ளாவி பருகு மாறு வருமுனே
வாயு வேக மான தேரி லேறி யென்றன் னாவியே
மானு நேய ரெனைநி னைந்து வந்து கூட லருமையே
நீயி நாளின் வரைபு ரிந்த வாறு செய்தி டாமலே
நேயமோ டெனாவி வாழு மாறு கூடு கூடலே. 74

கட்டளைக்கலித்துறை

கூடும் படிக்கருள் செய்வார்கொலோ தொண்டர் கூட்டமன்றி
வாடும் படிக்கு விடுவார் கொலோகொடு மாயையினில்
நீடும் படிக்கணி யாமர சம்பல நின்மலனார்
பாடும் படிக்கவுணிக் கமுதீந் தபரஞ் சுடரே. 75

அறுசீராசிரிய விருத்தம்

சுடரனைய வமரர்மணி முடிதோய்ந்து னடிமலர்கள் சிவந்த வேயோ
படரொளிய வடிமலர்கள் படவமரர் முடிகளொளி படைத்த வேயோ
வடவரையி லழகியதென் கயிலைவளர் சாரலிலே வளஞ்சார் பேரூர்
தடவரையி லுயர்கோயி லடியர்குடி தழையவருள் தழைந்த தேவே. 76

மதங்கியார்

பன்னிருசீர் ஆசிரியவிருத்தம்

தேவ ரசைவு கண்டுவிடந் திருவா யமுது செய்தளித்தார்
செகங்க ளசையத் தாமசையுந் திருவா ரரசம் பலவாணர்
பாவும் புகழ்கள் பலபாடிப் பரதம் பயிலும் மாதங்கி
பணைத்த முலைக ளசையின்மதன் பரிய முடியு மசையுமிடைத்
தாவு மரிமா னசையின்வலித் தருண ருள்ளக் கரியசையும்
தாள்க ளசையின் முனிவருள்ளக் கோள்க ளசையு மிதழசையின்
காவல் புரியு மரசரையும் கண்ணாம் வேல்க ளசைந்திடிலோ
கால னசையு மெமதுமனக் கலக்க மிசைக்க வொண்ணாதே. 77

### கட்டளைக்கலித்துறை

ஒண்ணாது வெள்விடை யேவிரைந் தோடுவ தோர்கணமெங்
கண்ணாரக் காண்பதற் கிங்குநில் லாய்கரி கால்வளவன்
எண்ணா வரும்பழி தீர்த்தநற் பட்டிலிங் கேசனைமென்
பெண்ணார்க் கிடர்விளைப் பாரோ வறத்திற் பெரியவரே. 78

### வெண்பா

பேரழகன் பட்டிப் பெருமா னெழில்கண்டால்
யார்பசப்புற் றுள்ளம் இளகாதார் - நாரணனுந்
தங்கையும்தம் மேனி தழுவித் தணிந்தாரோ
பைங்கொடியீர் மேனிப் பசப்பு. 79

### அறுசீராசிரிய விருத்தம்

பசக்குமே தளிர்போன் மேனி பாலொடு தேனும் வேம்பாய்க்
கசக்குமே கலைநீங் கும்மே கைவளை கழன்று போமே
இசைக்குமே பட்டி பட்டி யென்றுகண் ணீமல் கும்மே
வசைக்குமே தேனு மஞ்சாள் மடந்தைதன் செயலீ தென்னே. 80

### மடல் விலக்கு

#### பன்னிருசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

செயலையந் தளிருந் திகழுமென் கொடியுந்
தெங்கிளங் குரும்பையு மடியும்
சிறியநுண் ணிடையு முலையுமென் றெழுதிற்
செவ்வன நடக்குமோ நுடங்கிப்
புயமலை யழுந்திக் குழையுமோ பவளம்
பொருகயல் மதியிதழ் விழிகள்
பொலிமுக மெனநீ யெழுதிடில் அமுதம்
பொழியுமோ மிளிருமோ நாண்மோ
புயலென முழவ மதிர்தர மந்தி
பொதும்பர்புக் கொளித்திடும் பேரைப்
புண்ணிய னடிகள் நண்ணிடா தவர்போற்
புன்றொழிற் செய்யவுந் துணிந்தாய்
அயலவர் பழிப்புக் கஞ்சிடாய் பறவை
யலமரற் கிரங்கிடாய் மடன்மா
அழைத்துநீள் வீதிவருவல்நாண் டுறந்தென்
றறைந்திடு மடல்கொள்வே லவனே. 81

கட்டளைக்கலித்துறை

புணர்ந்துடன் வருவோர்ப் பொருந்தி வினாதல்

வேலைப் பழித்த விழியாளு மன்பனு மேவிடப்
பாலை வனத்திடைப் பார்த்ததுண் டோபட்டி நாயகர்சேய்
போலைப் படைத்தவற் கண்டேனிவ் வன்னை புகல்பிறிதென்
னூலைப் பழித்த விடைத்தே மொழியாய் நுவலுகவே. 82

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

நுவலருஞ்சீர்ச் சொல்வேந்த னல்லேன் ஞானம்
நுகர்ந்தமறைப் பிள்ளையல்லேன் நம்பியல்லேன்
உவமமிலாத் திருவாத வூர்த்தே வல்லேன்
ஓங்குதிரு வருள்வடலூர் வள்ள லல்லேன்
அவர்மொழிகூட் டுண்டதிருச் செவிகட் கந்தோ
வடிநாயேன் புன்மொழிக ளாமோ விண்ணோர்
நவவமுதுண் டவர்க்கேழை புன்கூழ் வார்த்தல்
நயப்பாமோ திருப்பேரூர் நயந்த தேவே. 83

எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

தேவ தேவநிற் பித்தனென் றிகழேன்
செம்ம லர்ப்பதம் சுமந்திட முனியேன்
ஓவி லாதுபொன் றருகென வளையேன்
ஊடு மாதர்பாற் றூதென விடுக்கேன்
ஆவ லான்வலிந் தடிமைசெய் கின்றேன்
ஐய னேயெனக் கொளித்திட லழகோ
பாவகாரிகட் கரியவான் பட்டிப்
பச்சை வல்லிசேர் பவளமால் வரையே. 84

எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

வரையனைய வின்முறிய மாட்டி னேனோ
மண்சுமக்க வைத்தேனோ வழக்கிட் டேனோ
புரைநெறியிற் புகுந்தேனோ கல்லா லுன்னைப்
போட்டேனோ வுதைத்தேனோ செருப்புக் காலால்
விரைமலரார் முடிமீதி லுமிழ்ந்திட் டேனோ
மிகவிரந்து மிரங்காத வினையா தெந்தாய்
சுரையருந்திக் கொலைபயின்று திரிந்த பொல்லாச்
சுமதிதனக் கருள்பேரூர்ச் சுரர்தங் கோவே. 85

இடைச்சியார்

கோவின்பால் வெப்பொழித்துக் கூடலின்பா
    லருள்புரிந்த குழந்தை ஞானப்
பாவின்பா லானாத பற்றுடையான்
    பசுபதியான் பட்டி யூரில்
ஆவின்பால் பகருமெழி லாய்ச்சியரே
    நும்மைம்பா லணையின் மேவிப்
பூவின்பா லூறலருந் திடநேயம்
    புரிவீரேற் புகழ்கொள் வீரே. 86

செவிலியிரங்கல்

கட்டளைக்கலித்துறை

கொள்ளார் நிரைகவர் வேடர் துடிக்குளங் கொட்குங்கொலோ
முள்ளார் பரன்முரம் பத்தடிபாவ முசியுங்கொலோ
கள்ளார் தொடைக்கரி காலன் பழியொழி கண்ணுதல்சீர்
உள்ளா ருறுங்கொடும் பாலையில் வாடுங்கொ லொண்டொடியே 87

ஆடுதிருடன்

எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

ஒண்டொடிச்சிற் றிடைச்சியுள முருகமய லூட்டி
    உமைக்காத்த வண்டர்விழித் திருக்க வயலோட்டிக்
கொண்டனிறக் கோபாலக் கோன்வாய்மண் போட்டுக்
    குளிர்சோலைப் பேரூரிற் பட்டியினிற் குனித்தே
கண்டவர்க ளதிசயிப்ப வாட்டையெடுத் தெமது
    கண்ணிலகப் பட்டபெருங் கள்வரே யுமக்குத்
தெண்டமிடு வோமலர்தூற் றிடுவோம்தா ளிணைகள்
    சிக்கெனவே பிடித்தொடுக்கச் சிறையிலிடு வோமே. 88

எழுசீர்கழிநெடிலாசிரிய விருத்தம்

ஓமிகு மறையை யிடையற லின்றி
    யுணர்வினி னவின்றெனை யலைக்கும்
தோமிகு புலனு முள்ளமு மொடுங்கத்
    துலையினா வெனவசை வின்றி

நாமிரு வரும்வே றறப்புண ரின்ப
ஞானநன் னிலையெனக் கருள்வாய்
காமிகு பேரூ ரரசவை நடுவோர்
காலெடுத் தாடுகற் பகமே. 89

வெண்பா

கற்போலுந் திண்மை கழிந்து நிமிர்ந்தவுடல்
விற்போலு முன்னமே மேவுகவே - அற்போலும்
கண்டத்தா னண்டத்தர் காவலான் வெண்டிங்கட்
டுண்டத்தான் பேரூரான் தொண்டு. 90

ஆசிரியப்பா

தலைவன் வரைவொடு வரக்கண்ட தோழி கூற்று

தொண்டர் பெருங்குழுக் கொண்டுகு லாவி
ஒருவர் நெஞ்சணிநீ றொருவர்பின் படியத்
தாய்வரக் காத்தநற் சேய்போ னிற்ப
வெள்ளியங் கிரியிற் றுள்ளிவீ ழருவி
முழக்கென முழவு முழங்க வின்னியம்
தேனிக ரிசைநெடு வானகம் பரப்ப
அந்தண ரருமறைச் சந்தங் கரைய
முந்திய மூவர் செந்தமிழ் செவிவழிச்
சிந்தைபாய்ந் தின்பந் தேக்கச் சிவசிவ
அரகர வெனுமொழி கடலென முழங்கச்
சீரார் பங்குனி யுத்திரத் திருநாள்
ஆரா வமுதன் ஆன்பட்டி நாதன்
பாரோர் பரவப் பச்சைக் கொடியொடு
கோயில் வாயிற் குறுகிடக் கண்டோர்
எல்லார் சிந்தையு மெய்துபே ரின்ப
மனைத்துந் திரண்டென் னகம்புகுந் ததுபோ
லாயிற் றம்ம தாய்கொடுஞ் சொல்லும்
வம்ப மாதர்வா யம்பலு மலரும்
மூளாத் தீபோ லுள்ளே கனற்றும்
மாளாக் காம நோயும் வீய
வாளை வாயிற் பாளை வாய்த்தேன்
துளிக்கும் பழனக் கழனி யூரன்

சான்றோர் முன்னுறப் பொன்னொடெம்
மீன்றோர் பால்வரை வென்னவந் ததுவே. 91

### எழுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

### தோழி கூற்று

வந்து வந்தருள் தந்தி டாரெனி
னும்பு லந்திட வல்லனோ
நொந்து நொந்து நினைந்தி டுங்குறை
தம்மை யேவரி னொய்தினின்
முந்து முந்தென நூக்கு முள்ள
நலங்க ளேமு னுணர்த்தியே
இந்தி ருந்த முகத்தி பேரையி
லீச ரன்புறு நேசரே. 92

### தோழி தலைவனை நகுதல்

### கட்டளைக்கலித்துறை

சரணம் புகுந்தவர்த் தானாக்கு மான்பட்டிச் சங்கரன்றாள்
அரணம் புகுந்தவெம் மையரெய் யுங்கணை மொய்களிற்றின்
முரணம் புகர்முகந் தைத்தூ டுருவிப்பின் மண்முழுகும்
இரணம் புல்வாய்ப்படைத் தோடவெய் தீர்வின்மை யென்னென்பதே. 93

### வெண்பா

என்னஞ்ச னெஞ்சே யியமன் றனக்காழி
வன்னஞ்ச முண்ட மணிகண்டன் - பொன்னஞ்ச
மாலிக்குஞ் சோலைப்பே ரூருக்குள் ளானின்பம்
பாலிக்குங் காலுண்டு பற்று. 94

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

பற்றாதார் புரமெறிந்த பவள வண்ணா
பட்டீசா மரகதப்பெண் பாகா சென்னிக்
கற்றாவின் கோடுழுத தழும்பு மார்பிற்
காரிகையாள் முலைத்தழும்பு மேனியெல்லாம்
முற்றாத னெறிந்தசிலைத் தழும்பும் பாண்டி
முடிமன்னன் னடித்தழும்பும் முதுகின் மீதும்
பெற்றாலுந் திருவடிக்கோர் தழும்பின் றென்னும்
பெருங்குறையென் னுளத்திருத்தப் போகுங் காணே. 95

### பருவமன்றெனப் புகறல்

அறுசீர் ஆசிரிய விருத்தம்

கண்டின் மொழியா யஞ்சற்க கனிவாய் வெள்ளி மலையில்வார்
அண்டம் பரவ வெடுத்தவர கரவென் னார்ப்பா மடுபுகையாம்
விண்டின் னெழுந்த வெரிக்கொழுந்தாம் மெய்யே காரன் றவர்மறவார்
அண்டி னவரைக் கைவிடுத லறியார் பேரைக் குரியாரே. 96

அறுசீர் ஆசிரிய விருத்தம்

யாரென்று குலமென்ன நலமென்ன வென்றொன்று மறியாமலே
சீரென்று முளபேரை மன்றன்ற னடியார்த மிற்சேரல்போல்
காரென்று மீனென்று குழலொன்று பூவொன்று களிமஞ்ஞையாம்
நாரென்று முளதாக வுளமன்றி யுயிரொன்றி னாமின் றையே. 97

### கையடை

கட்டளைக் கலித்துறை

இன்றைக்குப் பொன்னனை யாணிற் கடைக்கல மேந்துமிரு
குன்றைப் பொருமுலை நான்முலை யாயினும் கொங்கரச
மன்றற் குயிர்கள்தம் மாட்டருள் போன்றிவள் மாட்டுனருள்
என்றைக்கு மன்னுதல் வேண்டுஞ் சுடர்வே லிறையவனே. 98

வேற்றொலி வெண்டுறை

இறைவரெனச் சமயர்தொழு குலமாகி யிருந்தும் பேரூர்
இறைவர்வய லுழுகடைஞ னெனெவருளி னெய்தினரா லுலகீ ரன்னோர்
உயர்ந்ததி லுயர்ந்தவ ரிழிந்ததி லிழிந்தவர்
வியந்திடு பெருங்குண ரறிந்து மகிழ்வீர். 99

அறுசீர் ஆசிரிய விருத்தம்

மகிழ்நர்நமை மறந்ததனுக் குளர்ந்தளர்ந்தேன்
அல்லேன்கை வளைக ளெல்லாம்
நெகிழவுடல் தளரவரும் சிறுகாலான்
நைந்தேனோ வல்லேன் நின்னை
எகினவிளம் பெடையனையாய் மறவனென
விசைத்தகொடுஞ் சூளை யெண்ணி
முகிழ்முலையாய் பேரூரன் முனிவுறுமோ
எனநினைந்து முள்குற் றேனே. 100

### கட்டளைக் கலித்துறை

ஏனைமின் னார்க்குவ மானமின் னாள்மருங் கெய்தினம்பூங்
கானைமன் னுங்கவர்ந் தீர்ந்தென்றல் வீச கடன்முழங்க
தேனைமன் னும்மிசை பொங்குக பேரூர்ச் சிவன்புகழ்போல்
வானைமன் னும்மதி யெங்கும் பரப்புக வாணிலவே. 101

### வாழ்த்து

வெண்பா

வாழி திருப்பேரூர் வாழி மரகதப்பெண்
வாழியர சம்பலவன் மன்பதைகள் - வாழியவன்
அஞ்செழுத்தை யோதி யடியார்பணி செய்தரன்றாள்
நெஞ்சமுழுத்தி வாழ்க நிதம்.

*திருப்பேரூர்க் கலம்பகம் நிறைவு*

*திருஞானசம்பந்தன் சேவடி வாழ்க!*



## குறிப்புரை

கா. நேரிசை வெண்பா. பாட்டுக்கு அளிக்கும் சீர் - பாடும் பாட்டுக்குப் பரிசில் வழங்கும்; பாட்டுக்குப் பெருமை சேர்க்கும். வேட்டு - விரும்பி. களிறு உள்ளத்தே வந்து அழகமர் இன்சொல் பொருள் கூட்டும் எனமுடிக்க.

சம்பந்தன் மெய்ப்புகழ் பேசுநர்க்கு அறம்பொருள் இன்பம் வரும், திருமால் முதலானோர் பதம் ஒரு பொருட்டோ எனும் பெருமை எளிதில் கிட்டும். "அயன்திருமால் செல்வமும் ஒன்றோ என்னச் செய்யும் தேவே" சிவஞான சித்தியார் - காப்பு)

1. **உன் படிவமொடு படி நிமிரும்** - வெள்ளிமலை சிவசொரூபமாகப் பூமியில் உயர்ந்தது. **பேரூர் கனிந்து அமருங் கண்ணுதல்** - உடல் எங்கும் பரவியிருந்தாலும் பசுவின் மடியிற் பால் சுரத்தல்போல. சிவபரம்பொருள் பிரபஞ்சம் எங்கும் பரவி இருந்தாலும் பேரூரை விரும்பித் தங்கியுள்ளது.

இறைவன் யாவரினும் உயர்ந்தவனாகியும் யாவரினும் தாழ்ந்தவனாகவும், உயர்ந்தவற்றைக் கொண்டான் தாழ்ந்தவற்றில் மிகத்தாழ்ந்தவற்றையும் கொண்டும் உள்ளான். இது அவனுடைய எளிவந்த தன்மை.

அப்பாலாய் - விளி. நாதாந்த நாடகம் புரிவோய் - புழுதி. **உலகுநிகழத்தினையே** - பள்ளனாய் உழவு தொழில் நிகழ்த்தினையே. (திருக்குறள் - ***1031***)

ஈசன் - ஐசுவரியம் உடையவன், செல்வன்.

கண்ணுதலே! நீ, உயர்ந்தது இழிந்தது, நன்மைதீமை எனும் வேறுபாடின்றி ஒப்பக் கருதுபவன், உயர்ந்தது என்ற விருப்போ தாழ்ந்தது என்ற வெறுப்போ நீ கொள்வதில்லை. அதனால் மூவர் பாடல் கேட்ட செவிக்கு என் வறுஞ்சொல் கொள்ளுவதும் முறைமையாகும். தோடு - அம்பிகையின் செவியைக் குறிக்கும். குதலை மொழி தாயின் செவிக்குக் குழலிசை யாழிசையினும் இனிமை பயத்தல் வியப்பன்றே

2. மாயாத வீடு - நிலையான முத்திப் பேறு. அளறு - சேறு; நரகைக் குறித்தது.

3. குழகன் - குழையை அணிந்தவன்; ஞான மகரகுண்டலம் தரித்தவன்; இளையவன். **குழ காமதேனு** - இளமையான காமதேனு. **குறி** - இலிங்கம். **அழகானை** - அழகிய ஆனேற்றினை 2ஆம் வேற்றுமை ஏற்ற பெயர். **ஆன்பட்டி** - திருப்பேரூர். பழகா - பழகு ஆ. நட்புற்ற காமதேனு. நிலைமொழிக் குற்றியலுகர ஈறு உயிரேறி முடிந்தது. பழகா - பழகி. செய்யா என்னும் வினையெச்சம், 'நிலங் கிளையா நாணிநின்றோள்' என்றாற்போல வினைமுதலைக் கொண்டு முடிந்தது. **படைக்கும் திறம் படைத்தாய்** - உலகினைப் படைக்கும் ஆற்றலை அளித்தாய்.

4. தோழி, திருப்பேரூர் ஈசர் இடத்துக் காதல் கொண்ட தலைவியின் நிலையைக் கூறி அவளுக்கு அருள வேண்டுதல்

5. மடக்கு அல்லது யமகம் என்பது வந்த சொல்லே வரும் ஒருவகைச் சொல்லணி. எழுத்துக்களது தொகுதி, பிரஅவெழுத்தானும் சொல்லானும்

இடையிடாதும் இடையிட்டும் வந்து பெயர்த்தும் வேறு பொருளை விளைப்பது மடக்கெனும் அலங்காரமாம். (தண்டியலங்காரம், சொல்லணியியல், சூ93. இது சொல் முற்று மடக்கு. **அத்தம்** - ஹஸ்தம்; கை. கையில் கொண்டது அரிமானும் உடுக்கையும். **அரை** - இடை. மான் உரி உடுக்கை; **ஒண் களம்** - ஒளியுடைய கண்டம். **வாரி** - கடல். **கடுக்கை** - நஞ்சு. **கண்ணி** - தலைமாலை. மாலையும் கண்ணியும் தேன் சொரியும் கொன்றை. **கடுக்கை** - கொன்றை. **அரசவனம்** - திருப்பேரூர். அடியார்க்கு ஈந்தது அரச அனம் - அன்னம்; சோறு; வீடுபேறு. பேரும் ஊரும் உடைய பிறப்பு இனி இல்லை.

6. **இல்லை** - மனையை, குடும்பத்தை. **தொல்லைப் பிறப்பு** - மிகப்பழங்காலந்தொட்டு வருகின்ற பிறப்பு; 'தொல் பிறவி' என்பது காண்க. **சுழல்கை** - பிறப்பு இறப்பு எனச் சுழல்கை. **ஒல்லை** - விரைவில். **உறுதி** - வீடு. **மல்லல்** - வளம்)

7. **உள்ள** - தியானிக்க. **சள்ளை** - துன்பம்; பேச்சுவழக்கு. **எள்ளல்** - 'அல்'ஈற்று எதிர்மறை வியங்கோள். அலட்சியப்படுத்தாதே என்பது பொருள்.

8. **மனன்** - மனம். 'மகர இறுதி அஃறிணைப் பெயரின், னகரமோ டுறழா நடப்பன உளவே' (நன்சூ122). **சினனே** - ஏகாரம் எண்ணிடைச்சொல். **இனன்** - சூரியன். **புரை** - உவம உருபு.

9. **கத்தருத்தவம்** - கர்த்தருத்தவம், செயல் தலைமையும் செயல் திறமும்.

10. **வரை** - மலை. **கரியன்** - மால். **புரை** - குற்றம். **அறையின் மறை** - பாறைகளின் மறைவில். - பரவியுள்ள இருட்டு. தலைவன் இரவில் வரும் வழியின் ஏதத்தைக் குறித்த தலைவியின் அச்சத்தைக் கூறியது.

11. தோழி, தலைவியை விரும்பி வந்த தலைமகனிடம் அவன் பிறந்த குலத்தின் உயர்வையும் தலைவியது குலத்தின் தாழ்வையும் எடுத்துக் காட்டி இருவருக்கும் வாழ்க்கை ஒவ்வாறு என்று கூறி அவனை அவளிடமிருந்து சேய்மைப் படுத்துதல். இஃது இருவரையும் பிரிப்பது நோக்கமன்று. தலைவியை அருமையுடையளாக்கி அவள்மீது அவனுக்கு வரைதல் வேட்கையைப் பெருக்குவதே நோக்கமாம்.

ஆகாயம் போலப் பரந்த குளம். அதில் படர்ந்த மேகக்கூட்டம் போலப் பசிய தாமரை இலைகள். விண்மீன்கள் என இடையே செறிந்துள்ள அரும்புகள். அவற்றின் நடுவில் மதியென மலர்ந்த வெண்டாமரை மலர். அந்தப்பெரிய, அன்று மலர்ந்த தாமரைமலர் நிறைந்து சொரிந்த தேனினை விரும்பாதவண்டு, குறவர் மறைத்து வைத்த மலைத்தேனின் மணத்தை விரும்பி உழலும். அத்தகைய வள நாட்டுக்கு இறைவன் நீ. இவ்வாறு தலைவன் நாட்டின் வளத்தைக் கூறியதால், எப்படி, வண்டு பெரிய தாமரை மலர் சொரிந்த எளிதில் தான் பெறத்தக்க மிகுதியான தேனை விட்டுக் குறவர் மறைத்து வைத்த தேனை விரும்பி உழலுகின்றதோ அவ்வாறே உயர்குடிப் பிறப்பினனான நீ, உனக்கேற்ற குலத்திற் பிறந்ததொரு பெண்ணை எளிதில் வரைந்து இன்பந் துய்க்காமல், குறவர் இற்செறித்து வைத்திருக்கும் தலைவியின் உறவை விரும்பித் துன்பப்படுகின்றாய் என்று கூறி தோழி சேட்படுத்தியது. தலைவியை மலைத் தேன் என்றதால் அவளின் சிறப்பும், குறவர் ஒளித்த மலைத்தேன் என்றதால் குறவர்களுக்கு அவளின் அருமையைத் தோழி தலைவனுக்கு உணர்த்தியவாறு.

பொருளாறலைத்து - உலகியல் பொருள்களைத் தேடும் வழியை நீக்கி; சிவவேடக் கள்வர் - சிவவேடத்தால் உள்ளங்கவர் கள்வர். கொள்ளை கொண்டுண்ணும் - பேரூரிறைவரின் திருவருளை முழுமையாக அனுபவித்துக் கொண்டு இருக்கும் என்னும் பொருளையும் தருதல் காண்க. சிற்றின்பம் வேட்கும் உனக்கும் பேரின்பத்தில் திளைத்துக் கொண்டிருக்கும் அவள் குலத்துக்கும் ஒத்து வராது என்றாள் என்க.

12. பேரூர் இறைவன் மீது காதல் மயக்கம் கொண்ட தலைவியின் நிலை கண்ட செவிலி கூற்று. தலைமாலை பாம்பு; மார்பிணி ஆமையோடு; பூசியுள்ள சாந்துவெண்சாம்பல்; பொன்மதலை - பொன்னிறமான கொன்றை; மாலை ஆர்க்குஎருக்கு ஊமத்தை; தாய் தந்தை இல் - பெற்றோரில்லை; மோதுஅலை மாலை வாரி - அலை மோதுதலைத் தன் இயல்பாக உடைய கடல்; நஞ்சு ஊண் - நஞ்சு உணவு; உரி - தோல்; தாம் மன் அறிதலை - தம்மோடு பொருந்தி இத்தகையவரை அறிதலை; மாலை உற்றனள் - மயக்கம் கொண்டனள். தவத் தையல் - தவத்தால் பெற்ற தையல்.

13. தலைவன் மீது காதல்மயக்கம் கொண்ட தலைவியது நிலையைக் கண்ட தாய் அது தெய்வம் அணங்கியதால் விளைந்தது என்ற ஐயுற்று. வெறியாடலுக்கு ஆயத்தம் செய்கின்றாள். முருகன் சாமியாடியாகிய வேலன் மீது வந்து ஆடுவதுதான் வெறியாட்டு. வேலன் வெறியாட்டில் ஆடு பலி கொடுப்பது வழக்கம். இந்நிலையில் செவிலி அறியும்படியாகத் தோழி வேலன் வெறியாட்டத்தை விலக்கும் முகமாக, மறைமொழியாகத் தலைவியின் காதலை வெளிப்படுத்துவாள். இதுவே வெறி விலக்கல். வெறி விலக்கின் பயன் தலைவியின் காதலைத் தாய்க்கு உணர்த்துதல்.

தையலுக்கு அம் மாற்பாணன் தந்தருளின் உய்யலாம் - நம் மகளுக்குத் திருமாலை அம்பாகக் கொண்ட பேரூரான் தன்னுடைய கொன்றை மாலையைத் தந்தருளினால் உய்யலாம். ஐய - வெறியாடுகின்ற வேலனே; ஒரு வருடை அழித்தென் - ஒரு ஆட்டைப் பலியிடுவதால் என்ன பயன்? மிக்க வருத்தத்தைத் தருகின்ற தலைவியின் நோயை நீர் போக்க விரும்பினால், பேரூரிறைவனுடைய தேன்கமழும் கொன்றைமாலையைக் கொண்டுவந்து அவளுக்குச் சாத்துங்கள். பேரூர் இறைவனுக்குச் சாத்திய கொன்றை மலையை அணிவித்தால் நோய் தணிவாள் என்று தோழி நோய்க்கு உண்மைக் காரணமும் பரிகாரமும் மறைமொழியாக உரைத்த சிறப்புக் காண்க. தையலுக்கு உடையை அழித்து என்னபயன் என்பதொரு நயம்.

14. சித்து என்னும் கலம்பக உறுப்பு இராசவாத சித்தர்களின் போலித்தனத்தை எள்ளி நகையாடுவதாகும். எளியபொருளைப் பயக்கும் அவர்களுடைய சொல்லாடல் மிக உயர்ந்த பொருளைப் பயப்பது போலத் தோற்றம் அளிக்கும்.

கொன்றைவேணிப் பட்டிசர் - கொன்றையை அணிந்த சடையை உடைய பட்டிசர். பித்தளை - பட்டிசர் மீது பித்துக் கொண்டவளை, பித்தளை உலோகத்தை. கோதில் பொன்னென்று - குற்றமற்ற அழகியள் என்று, குற்றமற்ற தங்கம் என்று. மையிட்டு - கண்ணுக்கு மையிட்டு, இரசவாதை மை இட்டு. அன்றை - அன்று+ஐ. ஐ சரியை. மாலுக்கு - திருமாலுக்கு. இரும்பை - கரிய நச்சுப் பையை உடைய பாம்பை. காளிங்கன் என்னும் பாம்பை, இரும்பு

ஆகிய உலோகத்தை. ஆடகம் - கூத்தாடும் இடம், உயர்ந்த வகைப் பொன். மகன் - திருமாலின் மகன், பிரமன். ஆகம் - உடம்பு. பொன் ஆக்கினேம் - பொன்னிறம் ஆக்கினேம். பொன்னாக ஆக்கினோம்.

இன்று - இப்பொழுது. கஞ்சம் - தாமரை, உலோபம். பொன்னையும் ஆக்குவோம் - இலக்குமியை இருக்கச் செய்வோம், பொன்னாக மாற்றுவோம். இரதங்கூட்டிச்செப்பில் உரை ஏற்றுவோம் - சொல்லிற் சுவை கூட்டிப் பேசுவோம், இரசவாதம் செய்து பொன்னுக்கு மாற்று அதிகரிக்கச் செய்வோம். சொன்னத்தை - ஸ்வர்ணத்தை, தங்கத்தை, சொன்ன சொல்லை.

தனக்கு உணவையும் இரந்து பெறும் இரசவாதி உமக்கு என்ன வேண்டும் எனக் கொடையாளியைப்போலக் கேட்பது ஒரு நயம்.

15. வேண்டத் தக்க தறிவோய்நீ என்ற திருவாசக குழைத்தபத்துப் பாடலின் கருத்தை நினைவுபடுத்தியது.

16. பீறற் குடில் - ஓட்டைக் குடிசை, நவ துவாரங்களை உடைய உடல். கிஞ்சுகம் - கிளி போன்ற மகளிர். சுழலும் - மயங்கி அலையும். துரிசு - குற்றம். அமிழ்தம் ஏசுகம் என்றே தேர் - தேவாமிர்தம் இழிந்தது எனத் தெளிந்து. சிற்சுகம் - அறிவானந்தம். அம்பலவ! சிற்சுகம் என்று தொண்டு பட்டு தேர் அமிர்தம் ஏசுகம் என்று கூட்டுக.

17. உடலைப் பழித்தது. நாளை - ஐ அசை. மதிகேடர் - அறிவு அற்றவர்கள்.

18. இடையன் - மன்றாடி. நடு நிற்பவன். அம்பலத்தாடுவான் தொண்டர்களின் அடித் துகள் சிறப்புக் கூறப்பட்டது. ஆடு திருடும் இடையன் என்பது ஓர் நயம்.

19. அடிப்பட்டு - அடிமைப்பட்டு. ஆன் முனிவர் - பட்டிமுனி, மிடிப்பட்டு - வறுமைப்பட்டு. அடிப்பட்டி யன்முனி, மிடிப்பட்டி யான் - உயிர்வரின் உக்குறள் மெய்விட் டோடும், யவ்வரின் இய்யாம் - (நன்164) என்னும் விதிப்படிக் கொள்க. செடி - வஞ்சனை. இடர்பாடு - துன்பம். ஏல் - தாங்கிக் கொள்.

22. பட்டிசரைக் கண்டு காதல் கொண்ட பெண்ணின் நிலை கண்டு செவிலி அல்லது தோழி இரங்கிக் கூறுவது.

இளையாள் - இளம்பெண். மதன் - மன்மதன். இளையான் - சிறுபையன். கணையான் மெய் இளைத்தான் - மன்மதன் விடும் பூங்கணையால் உடம்பு இளைத்தான். விளையா அனல் - விளைவிக்காத அனல். சுடு வேய் இசை - சுடுகின்ற குழல் இசை. மூடை ஆயர் - மூடை நாற்றம் உடைய ஆயர்கள். மூடை நாற்றம் கொண்ட ஆயர்கள் விளையா அனல் எழுந்து சுடுமாறு வேய் இசை விளைத்தார்கள். இனிமையில் கரும்பொத்தவள். ஆயினும் அந்தக் கரும்பு மென்று சுவைக்க இனிமை தருவது. இவள் மெல்லாத கரும்பு. ஊனது - 'அது' என்பது பகுதிப்பொருள் விகுதி. இதற்குத் தனிப் பொருள் இல்லை. அளைந்தாள் - உண்ணாமல் கையால் புரட்டிக் கொண்டே இருந்தாள். பேருருளன் - பேரூரில் உள்ளவன். தாமம் - மாலை. அவன் அணிந்திருந்த மாலையை அணிவித்தால் அவனோடு திளைத்த இன்பம் அடைவாள் என்பது கருத்து.

23. அண்டர் தலைவன் - தேவர்களின் தலைவன். தேவாதிதேவன்;

இடையர்களின் தலைவன். மன்றாடி - அம்பலத்தில் ஆடுபவன்; இடையர் தலைவனின் பட்டம். இருவரும் பசுக்களைக் காப்பவர் ஆனதால் மன்றாடி எனப்பட்டனர். **வெள்விடையான்** - தருமவிடையை உடையவன், வெண்ணிறக் காளையை உடையவன். சிறிய இடைக்குலப்பெண். இப்பாட்டில் அண்டர், மன்றாடி, இடையன், ஆயன், இடைச்சி, கோன், பட்டியான் எனும் இடைக்குலப் பெயர்கள் வந்துள்ளன.

24. **சம்பிரதம்** - மாயவித்தை. மாயவித்தையில் வல்லவன் தன் ஆற்றலைத் தானே சிறப்பித்துப் பேசுதலாம். செய்வதற்கு எளிய செயல்களையே செய்வதற்கு அரிய செயல்கள் எனப் பொருள் தோன்றுமாறு பேசும் பேச்சுத் திறம் சம்பிரதன் ஆகும்.

**கையகத்து வரையடக்கிக் காட்டுவோம்** - கைக்குள் மலையை அடக்கிக் காட்டுவோம், கைக்குள் துவரையை அடக்கிக் காட்டுவோம். **ஏழ் கடலை உண்போம்** - கடல்கள் ஏழையும் குடிப்போம், ஏழு கடலைப் பருப்பை உண்போம். **கடுங்காற்றுகளை** - சூறாவளிக் காற்றுகளை, கால்துகளை - காலில் ஒட்டும் தூசுகளை. **தூசினாலே** - துகள் களினாலே, துணியினாலே. **இமைப்பு** - இமைப்பொழுது, கண்ணின் இமை. கண் இமை மூடினால் வையகம் மறைந்துதானே போகும். மண் மீது தேவலோகத்தைக் கொண்டுவந்து காட்டுவோம். வானம் மண் மீது தானே உள்ளது?

25. **விகிர்தன்** - வேறுபட்டவன். உலகியலுக்கு அப்பாற்பட்டவன். வேட்டுவனாகவும் வலைவாணனாகவும் பள்ளனாகவும் தோன்றினாலும் அவன் அவர்களின் வேறுபட்டு வீட்டுக்கு உரியனாகவும் உள்ளான்.

26. **சங்கரர்** - இன்பம் செய்பவர், கலப்பினத்தவர்

27. **இடக் கையார்** - இடக்கையை உடையவர். **விடக்கையார்** - கசந்து கைவிடமாட்டார். செஞ்சடையை உடையவர். கண்டத்தில் வெப்பமான நஞ்சை அடைந்தவர். **இதழியார்** - கொன்றையணிந்தவர், மென்மையான வாயிதழ் கொண்ட உமையை ஒருபாலுடையார். உமையின் கைக்கொட்டுக்கு ஆடுவார், அவள் ஊட உள்ளம் வாடுவார். ஆன்பட்டியிலிருப்பவர், யான் அறியாமலேயே என்னுள் தங்கியிருக்கும் வஞ்சகர். தானவர் - அரக்கர்.

28. **மாளாத மால் ஆன்** - இறவாத பரிய விடை. இது தருமவிடையைக் குறிக்கும். **மால் போற்ற** - திருமால் போற்றி செய்ய; வந்தனை. ஆல், முன்னிலை அசை. என்னுடைய மான் போன்ற மகளும் ஒழியாத காதல் மயக்கம் கொண்டாள். பேரூர்ப் பெருமானே, நீ அவளை ஆட்கொள்ள மாட்டாயோ? சொல்லு.

29. **பேச்சு** - வாக்கு. **மறைப்பொருள்** - சிவவேதியராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள். அருள்+தா=அருடா. "ளஃவேற் றுமையிற் றடவும் அல்வழி, அவற்றோடு உறழ்வும் வலிவரின் ஆம்" நூற்பா 227.

30. **பிணங்கி** - ஊடல்கொண்டு, **அறை போதல்** - நம்பிக்கைத் துரோகம் செய்தல்

31. **இழை கொண்ட** - மணிமேகலை முதலிய அணிகள் கொண்ட இடையை உடைய உமை; **மழைகொண்ட** - கார்மேகத்தின் நிறம் கொண்ட

நீலகண்டரும்; பிழை கொண்டு - பிழையைக் காரணமாகக் கொண்டு; பிணங்காத குணமும் உடைய பேருரானின் இடப்பாலையும் மதியையும் களனையும் தோளையும் அடியேன் இடுந்தலையும் ஏற்றுக்கொண்டு தயை புரிந்து ஆளும் திருத்தாளையும் உளத்தில் தரித்தேன்.

32. பாட்டுடைத்தலைவனின் திருப்புயங்களின் சிறப்பை விரித்துப் பாடுவது. அடிதோறும் 32 சீர்கள் கொண்ட சந்த விருத்தம். இவ்வகை யாப்பில் புயவகுப்பு என்னும் இக் கலம்பக உறுப்புப் பாடுதல் மரபு.

1.1) **தரியலர்கள்** - திருவடியைத் தரிக்காதவர்கள், பகைவர். **திரியும் எயில்** - திரிகின்ற முப்புரங்கள். **நெடிய கணை** - திருமால். மாபலிபால் மூவடி மண்கேட்டு விண்ணளவு நீண்டமையால் நெடிய கணை என்றார். **சயிலம்** - மலை. **வளைசிலை** - வளைத்த வில். மலையை வில்லாக வளைத்தமையால் தோள்கள் நிமிர்ந்தன.

1.2) **சதுமறைகள் தெரியும்** - நான்கு வேதங்களையும் தெரிந்த. **மலர் உறு பிரமன்** - மலரில் இருக்கும் பிரமன். **உயர்தலை** - அகந்தையால் நிமிர்ந்த தலை. நிறைந்த கல்வியின் அடையாளம் அடக்கம். பிரமனுக்கு வேதம் தெரியும். ஆனால் கற்ற வேதத்தின் பயன் அறியான். ஆதலால், அவன் தலை நிமிர்ந்தது. படித்தவன் தவறுசெய்தால் தண்டனை பெரிதாம்.

1.3) **சகம் முழுதும் உதவும்** - உலகம் முழுதையும் படைத்துக் காக்கும் முழுமுதற்கடவுள். **இலை** - இல்லை, இடைக்குறை. **முனிவர்** - தாருகாவனத்து முனிவர்கள். **தழலில் வரும் உழுவை** - அபிசாரவேள்வியில் தோன்றி எழுந்த வேங்கை. **உரி** - தோல்.

1.4) **தரு** - கற்பகமரம். **மடவியர்** - இளம் தேவ மகளிர். தேவமகளிரின் காதல் மிக்க நோக்கம் எனும் கணைகளால் துளைக்கப்பட்டன.

2.1) **இமையமயில்** - பார்வதி. **கன வரைகள் அன** - பெரிய மலைகள் போன்ற. மலையையும் வில்லாக வளைத்த வரைபோன்ற புயங்களும் அம்மையின் வரைபோன்ற முலைகளுக்குக் குழைந்தன.

2.2. **கவுணியர் குலமதலை** - கவுணியகுலக் குழந்தையான திருஞானசம்பந்தர். **அரசு** - திருநாவுக்கரசு சுவாமிகள். **விழைவினாலே** - விருப்பத்துடன்.

2.3. **கடி** - மணம். **எனை அனையர்** - என்னைப்போன்ற எளியர்கள். **எளிய தழை நீர்** - 'குடங்கை நீரும் பச்சிலையு மிடுவார்க்கு இமையாக் குஞ்சரமும், படங்கொள் பாயும் பூவணையும் தருவாய் மதுரைப்பரமேட்டி' இசைவாது. 34 திருவிளையாடற்புராணம்.

2.4) **கரடம்** - மதம். **கரிமுகவர்** - விநாயகர். 'மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம்'

3.1) **புகலும்** - விரும்பும். கந்தருவர் இருவர் இரு குழைகளாகச் செவியிலிருந்து பொழியும் இன்னிசையை விரும்பும். கந்தருவர் இருவர் இரு குழைகளாகச் செவியிலிருந்து பொழியும் இன்னிசையை விரும்பும். குழியொளியால் மின்னொளி சேர்ந்த மேருமலையை வென்றன.

3.2) **பணம்** - படம். **பணிகல்** - பாம்புகள். **பெருகொளிய பணிகள்** - ஒளிமிக்க அணிகலன்கள்.

3.3) **நறுமதலை** - கொன்றை. கொன்றைப்பூ பிரணவசொருபமானது. **ஏர்** - அழகு.

3.4) விசயனின் வில்லடியும் மாறனின் பிரம்படியும் பட்ட வடுவை சௌப்பியத்தால் அழகுடன் ஏற்றன.

4.1) **அருக** - இல்லாமற்போக. **இறுகுதல்** - இல்லையென்று மறைத்தல். இல்லையென்று கரத்தலை 'இறுக்கி வைத்துக்கொண்டான்' என்பது கொங்கு நாட்டு வழக்கு. கொங்கில் இல்லையென்போர் இல்லை.

4.2) **அளிகள்** - வண்டுகள். **தெனை** - தென்னை.

33. **புயங்கனே என்னுடைப் புயங்களைக் கா** - பாம்புகளைப் பூணாக அணிந்தவனே என்னுடைய தோள்கள் காதலால் இளையாமற் கா. *தியங்கா* - *தியங்கி*, 'செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். ***சிந்தை தியங்கி*** - சிந்தை கலங்கி.

34. **தவல்** - சுருக்கம். ஊடலால் சுருங்கி சிவந்த செங்கமலம் போன்றிருந்த கண்கள். தலைவன் விருந்துடன் வரக் கண்டு, இல்லறத்தின் பயனாகிய விருந்தோம்புதலின் பொருட்டுக் கருங்குவளைபோலத் தன்மையுடையதான தகைமையைக்கண்டு தோழி வியந்து கூறியது.

44. மதவேள் எம் உடலை ஈர்க்க மதிக்கின்றான். **ஈர்க்க** - அறுக்க. **மதிக்கின்றான்** - நினைக்கின்றன். **மதியீர்** - பிறையைத் தரித்தவரெ, அறிவுடையீரே. **கையீர்** - கைகளை உடையீர். **இருக்கையீர்** - வாழ்தலை உடையீர். **கையீர்** - கசந்துவிடாமல்.

46. **மொஞ்சல்** - பால்.

47. **துனும்** - துன்னும், கிடைக்கும்.

50. **ஆறை** - ஆறை நாடு. கொங்கு நாட்டுப்பிரிவுகளில் ஒன்று. ஆறைநாட்டுப் பேரூர் கல்வெட்டுக்களில் வழங்கும். **ஆயென** - தாய்போல் அளித்திடும்.

51. **போது இ வனத்து அயில்காய்** - இங்கு போந்து இந்தப் பாலை உண்க. இவ்வாறு அழைக்கப்பட்டவன் திருமால். 'எந்தை வருக - முலை உண்க வருக என கோசலை' (தொந்திசரிய, திருப்புகழ், திருச்செந்தூர்) **போது** - மலர், **அனத்தலம்** - அன்னப்பறவைக்கு இருப்பிடம். **போதிவனத்து அமர் சோதி** - அரசம்பலத்தில் இருக்கும் பட்டிப்பெருமான். **புன்மையறப் போதி** - சிறுமை நீங்குமாறு, அறியாமை நீங்குமாறு போதிக்கின்ற. **வனத் திருத்தொண்டர்** - அழகிய திருத்தொண்டர்கள். **போதம் இதே** - அறிவு இஃதே.

53. இந்திரபதவி, பிரமபதவி, சுப்பிரமணிய சாருபம், திருமால் பதவி, சிவசாருபம் பெறுவர். வெந் - வெரிந், இடைக்குறை, முதுகு.

56. பிச்சைக்கு வரும் வைணவப் பெண்ணொருத்தியைக் கண்ட காமுகன் கூறுவது கொற்றியார் என்னும் உறுப்பாகும். இவ்வுருப்புடைய பாடலில் வைணவம் மத சம்பிரதாயச் சொற்கள் சமற்காரமாகப் பயன்படுத்தப்படும்.

வையா நசையார் - பழிப்பிலா ஆசையுடையார். வைகானசம் என்னும் ஆகமம் உடையார். மாலார் - திருமால் சமயத்தினர், மயக்குபவர். பஞ்சர் - ஏழையர், வறியர். ராத்திரியர் - இரவுநேரத்தில் அலைபவர். உடையவர், பாஞ்சராத்திரம் என்னும் ஆகமத்தினர். வருந்துளவத்தார் - வருந்தும் உளத்தவர். துளவத்தவர் - துளசி அணிந்தவர். நீரான் மண்ணிடுவார் - நீரில் குளிப்பார், திருமண் (நாமம்) இடும் இயல்பினர். சங்கரி தன் நாமம் விளம்பிடுவார் - உமையின் நாமத்தை விளம்பிடுவார், சங்கு (பாஞ்சசன்னியம்), அரி தன் நாமம் கூறிடுவார். திருவாய்மொழி - இங்கிதப் பேச்சு, நம்மாவார் பாசுரங்கள். மாலார் நெறி - காமுகர்களை மயக்கும் நெறி, திருமால் நெறி. திருக்கண்ணமுது - அன்பான பார்வை, பாயசம். சடகோபம் - திருமால் கோவில்களில் பத்தர்களின் முடிமேல் வைக்கப்படும் திருவடி, கொங்கை.

57. இரா மானுசம் - மனித இனமே இராது. துளவம் - துளசி. மாலே மிகுது - மயக்கமே மிகுகின்றது. உள வந்தனை மார்பூடு தரித்தேன். மனமார்ந்த வந்தனையை என்மார்பூடு தரித்தேன். திருமண் அங்கம் அணிந்தீர், உம் காலடியில் உதிரும் புழுதியை என்னுடலில் அணிந்தேன்.

59. தமியேன் புன்சொல் ஆமோ. நாம் - அச்சம். ஓதம் - கடல்.

61. மீன் விற்கும் வலைச்சி மீது காமுற்றவன் கூற்று.

67. பிச்சியார் - பிச்சை கொள்ளும் சிவவேடங் கொண்ட பெண். பிச்சியார்மேற் காமுற்றவன் கூற்று. பிச்சியார் கரிய குழல் - பிச்சிப்பூ நிறந்த கருங்கூந்தல். ஐயம்பெய் - பிச்சையிடு. மாரன் ஐயம்பு எய்தான். எம் உயிர்க்கு ஐயம் பெய்கின்றீர்.

68. மேவல் தகுமோ? தழல் முழுக நகும் ஓதரிய பட்டிநாதன். இகும் - இற்றுவிழும். தரிப்பு அரிதே. தரித்தல் - தாங்குதல். மோதும் அரியினங்காள். அரியினம் - வண்டுக்கூட்டம்.

69. புணியங்கள் - புண்ணியங்கள். தொகுத்தல் விகாரம்

77. மதங்கர் என்போர் இசைக்கும் கூத்துக்கும் உரிய சாதியார். அச்சாதிப் பெண்மீது காமுற்ற இளைஞன் கூற்று இக்கலம்பக உறுப்பு. தேவர் அசைவு - தேவர்களின் நடுக்கம். அசைவு - நடுக்கம். இறைவர் அம்பலத்தே ஆடும் கூத்தால் உலகம் இயங்குகின்றது. அதுபோல மதங்கி ஆடும் கூத்தால் அசைகின்ற அவள் உடலுறுப்பால் அசைவனவற்றைக் கூறுகின்றது இப்பாடல். மகளிர் நகில் மன்மதன் முடியாகக் கூறப்படும். அரிமான் - சிங்கம். சிங்கத்தின் இடை மகளிரின் இடைக்கு உவமையாகக் கூறப்படும். தருணர் - இளைஞர். கோள்கள் - கிரகங்கள், பிரமசரியம், பெண்டிரை நோக்காமை முதலிய கொள்கைகள். இவைகள் எல்லாம் அசையும்போது என் மனம் கலக்கம் அடைவதைச் சொல்லத்தான் வேண்டுமோ என்றவாறு.

78. மென் பெண்ணார் - மெல்லியராகிய பெண்டிர். இறைவன் ஏறும் விடை தருமவிடையாகலின் அறத்திற் பெரியவர் என்றாள்.

81. காமம் மிக்க இளைஞர் தம் அன்புக்கு உரியரைப் பெறாதவிடத்து மடலேறுவதாகக்கூறுவர். மடல் - பனங்கருக்கு. தான் காதலித்த தலைவியைப் பெறாதவிடத்துத் தலைவன் பனங்கருக்காற் குதிரைபோர்செய்த ஊர்தியின்மேல் ஆடையின்றி எருக்கம்பூமாலை சூடிக் கொண்டு, தலைவியின் உருவம் வரைந்த

கிழியைக் கையில் ஏந்திக் கொண்டு ஏறுதல் மடலேறுதல் எனப்படும். ஊர்ச்சிறார் அக்குதிரையைப் பற்றி தலைவி வாழும் தெருவழியே இழுத்துக் கொண்டுவருவர். தலைவனின் உறுதியைக் கண்ட ஊரார் தலைவியைத் தலைவனுக்கு மணமுடிப்பர். இது புலவர் அகப்பொருளில் நாடகச் சுவை கருதி நாட்டிக் கொண்ட பலநெறி வழக்கு. மடலேற எடுக்கும் கிழியில் நீ அசோகந்தளிர் கொடி தெங்கிளங் குரும்பை ஆகியன எழுதித் தலைவியின் சீறடி, இடை, முலை எனக் காட்டலாம். ஆனால், அசோகந்தளிர் நடக்குமோ, கொடு நுடங்குமோ, தெங்கிலங்குரும்பை தலைவனின் தோள்மலையைக் குழைவிக்குமோ. இதழ் எனப் பவளத்தையும் கண்ணெனக் கயலையும் முகம் என மதியையும் எழுதலாம். அவை இதழ் போலஅமுதம் பொழியுமோ, முகம்போலமிளிருமோ, கண் போல நாணுமோ? மேலும் பறவைகள் கலங்கிடுமாறு பனையை அழித்து மடல்மா செய்து வருவல் என பேரூர்ப் புண்ணியனை அடையாத பாவிகள் போலப் பாவத்தைச் செய்யத் துணிந்தாயே, எனத் தோழி மடல் விலக்கியது.

82. பட்டி நாயகர் சேய் போல் ஐ படைத் படைத்தவற் கண்டேன், ஐ - அழகு, தலைமை.

84. பித்தன் என்று இகழ்ந்ததும், திருப்பாதத்தை முனிந்ததும், பொன் தருக என வளைத்ததும், மாதர்பால் தூது விடுத்ததும் நம்பியாரூரர்.

85. வில் முறிய மாட்டினது, அருச்சுனன். மண்சுமக்க வைத்தது, வந்தி. வழக்கிட்டது, நம்பியாரூரர். புரை நெறியிர் புகுந்தது, திருநாவக்கரையர். கல்லால் போட்டது, சாக்கிய நாயனார். உதைத்தது, கண்ணப்பர். உமிழ்ந்தது, திருநீலநக்கர் மனைவியார். சுரை - மது.

86. பால் விற்கும் இடைக்குலப் பெண்மீது காமுற்றவன் அவளிடம் கூறியது. இப்பாடலில் 'பால்' என்னும் சொல் பயின்றுள்ள சிறப்பை நோக்குக.

88. அண்டர் - தேவர்கள், இடையர்கள், கோபாலக் கோன் - கோபாலனாகிய திருமால், கோன் என்பது இடையர்களின் பட்டங்களில் ஒன்றாகிய கோனார் என்பதின் சுருக்கம். குனித்தல் - ஆடுதல். ஆட்டை எடுத்து - ஆட்டினைத் தூக்கிக் கொண்டு. ஆடலைச் செய்து. தெண்டமிடுவோம் - அபராதம் போடுவோம், வணங்குவோம். அலர் தூற்றிடுவோம் - மலர்தூவி வணங்குவோம், பழிதூற்றுவோம். சிறையிலிடுவோம் - மனச்சிறையில் வைத்துத் தியானிப்போம்.

92. தலைவனைக் காணாத போது புலந்த நெஞ்சம், கண்டபொழுது அவனை நோக்க முந்தியது. அதனால் புலக்க வல்லமோ எனத் தலைவி கூறினள். இந்து இருந்த முகத்தி - மதி வதனி, தலைவி.

93. கையில் தழை ஏந்தி, 'என்னால் அம்பு தைக்கப்பட்ட களிற்றினைக் கண்டீரோ' எனவினவி வந்த தலைவனைத் தோழி நகுதல். எம் ஐயர் - எம்முடைய தலைவன். இரணம் - புண். எம் ஐயர் ஏந்திவந்த அம்பு (தழை) அவர் எய்த களிற்றின் முகத்தை ஊடுருவிப்பின் மண் முழுகும்; மானின் வாயில் இரணம் (புண்) படுக்கும். தலைவரின் வில்லாண்மை (விண்மை) என்னென்பது எனக் கூறிச் சிரித்தது.

94. என் நெஞ்சே இயமன் தனக்கு அஞ்சல். ஆழி - கடல். பொனஞ்சம் - அழகிய ஹம்சம், அன்னப்பறவை. ஆலிக்கும் - ஒலிக்கும். இன்பம் பாலிக்கும்

கால் பேருருக்குள் உண்டு அதனைப் பற்று.

96. கார் காலத்தில் மீண்டுவருவேன் என்று வற்புறுத்தித் தலைவன் பிரிந்தான். கரிய மேகத்தினைக் கண்ட தலைவி கார்காலம் வந்துந் தலைவன் வரவில்லையே என வருந்தினாள். இஃது கார்காலம் அல்ல, வேறு காரணங்களால் கார்காலம் போலத் தோற்றம் அளிக்கின்றது, பேரூரனின் அன்புக்குரியவர் பொய் சொல்லார் எனத் தோழி தலைவிக்குக் கூறியது.

98. இஃது தோழி கூற்று. பொன் அணையால் நிற்கு அடிக்கலம். நாலுதல் - தொங்குதல். அரச மன்றற்கு - அரசவனத்து இறைவருக்கு.



